# அன்னைக்கு ஏற்ற மிகச்சிறந்த பாப்பா உணவு.



ஆரோக்கியமாகவும், மகிழ்ச்சியாகவும் உள்ள அன்னையால்தான், ஆரோக்கியமான மகிழ்ச்சியான குழந்தையை உருவாக்க முடியும். ஆகையால்தான் கர்ப்பமாக உள்ளபோது நீங்கள் முட்டை உண்ண வேண்டியது அவசியமாகிறது.

முட்டையிலே செறிந்துள்ள உன்னத தரமுள்ள புரதச்சத்து உங்கள் குழந்தைக்கு மனோபலத்தையும், உடல்பலத்தையும் அளிக்கவல்லது. தவிர முட்டையிலே, நல்ல கண்பார்வைக்கு அவசியமான வைட்டமின் 'ஏ' நிறைந்துள்ளது. நல்ல ஜீரண சக்தியை



'முட்டை குருமா' : அதுடன் 30-க்கும் மேலான சமையல் குறிப்புப் புத்தகம் இலவசமாகப் பெற எழுதவும்: என்.ஈ.சி.சி. E-13/14 ... S. No. 568/AB ... பூனே-411 037.

அளிக்கவல்ல வைட்டமின் 'பி' சத்துக்களின் அனைத்து வகைகளும் உள்ளது. வலுவான எலும்புகளுக்காக வைட்டமின் 'டி' உள்ளது.

ஆரோக்கியமான இரத்தத்திற்கென இரும்புச் சத்தும், நல்ல சுறுசுறுப்பைத் தரவல்ல ஃபாஸ்ஃபரஸும் உள்ளது.

அன்றாடம் ஒரு முட்டை அன்னையிடமிருந்து அருமைக் குழந்தைக்கு கிடைக்கும் விலையுயர்ந்த பரிசு.

**எந்த நாளும் சிறந்தது.**
**முட்டை உண்ண உகந்தது.**

NECC

நேஷனல் எக்
கோ-ஆர்டினேஷன் கமிட்டி

Enterprise/NECC/91 Tm



# சந்திரலேகாவுக்குக் கொடுமை: சோம்பல் முறிக்கட்டும் காவல்துறை!

சாந்தோமில் உள்ள தமது வீட்டிலிருந்து எழும்பூரிலுள்ள அலுவலகத்துக்குச் செல்லும் முன்னர், தமது அழகிய முகம் திராவக வீச்சினால் பாதிக்கப்படும் என்பதைச் சிறிதும் எண்ணிப் பார்த்திருக்க மாட்டார் ஐ. ஏ. எஸ். அதிகாரி சந்திரலேகா. இந்தச் சம்பவத்தையடுத்து தமிழக அதிகாரிகள் மத்தியில் ஒரு பீதி நிலவுகிறது.

''திராவகம் வீசியவர்கள் சந்திரலேகாவின் முகத்தைப் பாழ் பண்ணுவது என்ற நோக்கத்துடன் செயல்பட்டிருக்கிறார்களே தவிர, கொலை செய்வது அவர்கள் எண்ணமல்ல'' என்று சொன்னார் போலீஸ் கமிஷனர் ராஜகோபால்.

சந்திரலேகாவுக்குச் சொந்த ஊர் திண்டுக்கல். அப்பா விஸ்வநாத் முதலில் ராணுவத்தில் கர்னலாகப் பணியாற்றி விட்டு, பின்னர் போலீஸ் இலாகாவிலும் வேலை செய்தவர். அம்மா சாரதா எழுத்தாளர். பல பிரபல பத்திரிகைகளில் சாரதா விஸ்வநாத்தின் கதைகள் பிரசுரமாகியுள்ளன. அப்பா பல்வேறு ஊர்களுக்குப் பணி நிமித்தம் செல்ல வேண்டி இருந்த படியால், சந்திரலேகாவின் பள்ளிப் படிப்பும் பல்வேறு ஊர்களில் தொடர்ந்தது. பின்னர், திருச்சி சீதாலட்சுமி கல்லூரியிலும், சென்னை மாநிலக் கல்லூரியிலும் படிப்பைத் தொடர்ந்த சந்திரலேகாவுக்குக் கலெக்டராகப் பணியாற்ற வேண்டும் என்ற எண்ணம் அரும்பி, அது நிறைவேறியது.

ஐ. ஏ. எஸ். அதிகாரியாகப் பணியில் நுழைந்து இன்று இருபது வருடங்களுக்கு மேல் ஆகிறது. ஆரம்பத்தில் துணைக் கலெக்டராகச் செங்கல்பட்டிலும் சேரன் மாதேவியிலும் இருந்த பிறகு, பல்வேறு இலாகாக்களில் துணைச் செயலாளராகவும் செயலாளராகவும் பணியாற்றிய அனுபவம் சந்திரலேகாவுக்கு உண்டு. தென் ஆர்க்காடு மாவட்டக் கலெக்டராகப் பணியாற்றியதை அவரும் மறக்க முடியாது; அந்த மாவட்ட மக்களும் மறக்க முடியாது. கார் போக முடியாத கிராமங்களுக்கு மாட்டு வண்டியில் சென்று மக்களைச் சந்தித்திருக்கிறார். மின் கட்டண எதிர்ப்பை எதிர்த்து விவசாயிகள் போராட்டத்தில் ஈடுபட்ட போது பொதுச் சொத்துக்களுக்கு அதிக சேதம் நேராதபடி நடவடிக்கை எடுத்திருக்கிறார். உளுந்தூர்ப் பேட்டையில் தமது பணிக் காலத்தில் விபசாரத்தை ஒழித்த பெருமை சந்திரலேகாவைச் சாரும்.

'சர்ச்சைக்குரிய அதிகாரி' என்ற பெயரையும் சம்பாதித்துக் கொண்டார் சந்திரலேகா. ஜெயலலிதாவை, எம். ஜி. ஆர். அரசியலில் புகுத்தி, முன் நிலைப்படுத்திய நேரத்தில், எந்த அரசு பதவியிலும் அப்போது இல்லாத ஜெயை மக்கள் நலத்திட்ட நிகழ்ச்சிகளுக்கு அழைத்துப் பிரமாதப்படுத்தியிருக்கிறார் என்பது மாற்றுக் கட்சியினருக்குக் கசப்புணர்வை அளித்தது. இதனால் 'அ. தி. மு. க. வுக்கு வேண்டிய அதிகாரி' என்று பெயர் வந்து விட, கலைஞரின் சமீபத்திய ஆட்சியில், கோழி வளர்ப்பு வாரியம், ஆவணக் காப்பகம் என்று பந்தாடப்பட்டார். ஜெ. ஆட்சியில் டிட்கோவில் தலைவராகப் போடப்பட்டு, இப்போது மீண்டும் ஆவணக் காப்பகத்துக்குத் தள்ளப் பட்டதில் ஒரு பின்னணி உண்டு என்று கருதப் படுகிறது. 'கூட்டுத் துறையில் உள்ள ஸ்பிக் நிறுவனத்தில் அரசின் (டிட்கோ) பங்குகளை அதே நிறுவனத்தின் பாகஸ்தர்களான தனியாருக்கு விற்க சந்திரலேகா முட்டுக் கட்டை போட்டார் என்பது கலைஞரின் வாதம்.

சந்திரலேகாவின் சொந்த வாழ்க்கை மகிழ்ச்சிக்குரியது அல்ல என்பது அவரைக் கற்றியுள்ளவர்களுக்கு நன்கு தெரியும். அப்போலோவில் 378ம் அறையில் பலத்த பாதுகாப்புடன் சிகிச்சை பெற்று வரும் சந்திரலேகாவைச் சந்தித்தோம். முகத்தின் இடது பகுதி பாதிக்கப்பட்டிருந்தது. கழுத்து, கைகளிலும் திராவகத்தின் பாதிப்பு இருக்கிறது. பேச்சு தடுமாறுகிறது. அவரது குடும்பப் பின்னணி பற்றி விசாரித்த போது கண்களில் நீர் ஓரங்கட்டியது.

சந்திரலேகாவைத் தாக்கியவர்கள் யார்? எதற்காகத் தாக்கினார்கள்? பலவித வதந்திகள் நகரில் உலாவுகின்றன. நெல்லைக்கும், பம்பாய்க்கும் சென்ற போலீஸ் படை திரும்பி வந்து விட்டது. சம்பவம் நடந்த போது பிடிபட்ட ஒருவரைத் தவிர வேறு யாரும் இன்று வரை (28.5.92) கைதாகவில்லை. விரைவில் குற்றவாளிகளைக் கண்டுபிடித்து, வதந்திகளுக்கு முற்றுப் புள்ளி வைப்பார்களா போலீஸார்?

- ப்ரியன்



◄ கீதா கிருஷ்ணன்

## கீதா கிருஷ்ணன் :

**ம**த்திய அரசின் நிதி அமைச்சகத்தைத் தாங்கும் முக்கியத் தூண்களில் ஒருவர் (திரு) கீதா கிருஷ்ணன். ஜனாதிபதி மாளிகையை அடுத்துள்ள பிரம்மாண்டமான செயலகத்தின் வடக்குப் பகுதியில் அமர்ந்திருக்கும் கீதா கிருஷ்ணன், பிரதமர் நரசிம்மராவ், நிதியமைச்சர் மன்மோகன் சிங், வர்த்தகத் துறை இணை அமைச்சர் ப. சிதம்பரம் ஆகியோரின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். தற்சமயம் நிதி அமைச்சகத்தின் செயலராகப் பணியாற்றும் கீதா கிருஷ்ணன், கூடிய விரைவிலேயே காபினட் செகரட்டரியாக நியமிக்கப்படலாம் என்றும் பேசப்படுகிறது.

# நிதித்துறையின் தூண்களாக இரண்டு தமிழர்கள்!

கல்கி பத்திரிகை என்றதுமே, தாம் சிறு வயதில் சிவகாமியின் சபதம் படித்ததைத் தான் சட்டென்று நினைவுகூர்கிறார், கீதா கிருஷ்ணன். மயிலாப்பூர் பி. எஸ். உயர் நிலைப் பள்ளி மாணவர். சென்னை விவேகானந்தா கல்லூரியிலும், மாநிலக் கல்லூரியிலும் படித்துப் புள்ளியியலில் ஆனர்ஸ் பட்டம் பெற்ற இவர், 1958 ஆம் ஆண்டு இந்திய நிர்வாகப் பணியில் (I.A.S.) புகுந்தார். நாகப்பட்டினத்தில் சப்-கலெக்டராகவும், சேலம் மாவட்டத்தின் கலெக்டராகவும் பணியாற்றியுள்ள இவர், தமிழகத் தலைமைச் செயலகத்திலும், நிதி மற்றும் தொழில் துறை செயலராகப் பணியாற்றியுள்ளார். தமிழ்நாட்டின் பல பொதுத் துறை தொழில் நிறுவனங்களின் தலைவராகவும், சிறப்பு இயக்குனராகவும் பொறுப்பு வகித்திருக்கிறார்.

மத்திய அரசிலும், தமிழக அரசிலும் இருபது ஆண்டுகளுக்கும் மேலாக நிதித் துறையிலேயே பணி செய்திருந்தாலும், சுற்றுப்புறச்சூழல் அமைச்சகத்தின் செயலராகப் பணியாற்றிய அனுபவத்தையே தாம் மிகவும் ரசித்ததாகக் குறிப்பிடுகிறார். சுற்றுப்புறச் சூழல் ஒரு புதிய துறை. அதில் நாம் கற்றுக் கொள்ள நிறைய விஷயங்கள் இருக்கின்றன என்றும், நம் நாட்டில் வரும் ஆண்டுகளில் அரசு இந்தத் துறையில் அதிக கவனம் செலுத்தும்; செலுத்தியாக வேண்டும் என்றும் குறிப்பிடுகிறார்.

**கா**லை எட்டு, எட்டரை மணிக்கெல்லாம் அலுவலகத்திற்கு வந்து விடும் இந்த நிதித் துறைச் செயலர், தினமும் வீடு திரும்புவது இரவு ஒன்பதரை மணிக்கு மேல்தான். பட்ஜெட் தயாரான சமயத்தில் கீதா கிருஷ்ணனும், மற்ற நிதித் துறைப் புள்ளிகளும் பல இரவுகள் வீட்டிற்கே போகவில்லையாம். நாட்டின் பொருளாதாரத்திற்கு ஒரு புதிய திருப்பத்தை அளிக்கும் விதத்தில், இந்த ஆண்டின் பட்ஜெட்டைத் தயாரித்தது ஒரு வித்தியாசமான அனுபவம் என்று கூறும் கீதா கிருஷ்ணன், பிரபல பொருளாதார வல்லுனரான டாக்டர் மன்மோகன்சிங்குடன் வேலை செய்வது, தமக்கு நல்ல உற்சாகமளிக்கிறது என்றும் குறிப்பிடுகிறார்.

நாட்டின் நிதிப் பற்றாக்குறையைச் சமாளிக்க, நிதித் துறை பல சிக்கன நடவடிக்கைகளை எடுத்துள்ளது. செயலர், துணைச் செயலர் போன்ற மேல் நிலைகளில் கூட 25 பதவிகள் வரை ரத்து செய்யப்பட்டுள்ளன. அரசாங்க அதிகாரிகள் அடிக்கடி வெளிநாடுகளுக்குப் பயணம் மேற்கொள்வதைத் தவிர்க்க வேண்டும் என்றும், முடிந்தவரை வெளிநாடுகளுக்குப் போகாமல் நமது நாட்டின் தூதரகங்களின் மூலமாகவே காரியங்களைச் சாதிக்க முயற்சி செய்ய

வேண்டும் என்றும் அறிக்கைகள் விடப்பட்டுள்ளன. அப்படியே வெளிநாடுகளுக்குச் செல்வதானாலும், முதல் வகுப்பில் பயணம் செய்ய அனுமதியில்லை. இந்தச் சிக்கன நடவடிக்கைகளைப் பற்றிப் பேசுகையில், "இப்படிப்பட்ட நடவடிக்கைகளினால் அரசாங்கம் அதிகமாக ஒன்றும் மிச்சப்படுத்த முடியாது என்றாலும் ஒட்டுமொத்தமாக இவை அநாவசியச் செலவுகளைக் குறைக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்த உதவும்!" என்கிறார் கீதா கிருஷ்ணன்.

"புதிய தொழில், வர்த்தகக் கொள்கைகளின் காரணமாக, அரசாங்கத்தில் சில பதவிகள் குறைக்கப்படுவது, கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டுள்ளவ என்ற கொள்கை மாற்றத்தின் வெளிப்பாடே தவிர, அதற்கு ஆட்குறைப்பு என்று அர்த்தம் இல்லை!" என்கிறார் இவர். கல்வி, ஆரோக்கியம், சுகாதாரம் போன்ற துறைகளை அரசாங்கம்தான் கவனிக்க வேண்டும் என்றும், இத்துறைகளில் அடிமட்ட நிலையில் வேலை செய்ய நிச்சயமாக நிறைய ஆட்கள் தேவை என்றும் கூறுகிறார் இந்த நிதித்துறைச் செயலர்.

பலவிதமான பறவைகளை ரசிப்பதும் ஆங்கில நாவல்கள் படிப்பதுமே தம்முடைய பொழுதுபோக்குகள் என்று குறிப்பிடும் கீதா கிருஷ்ணன், இரண்டு பெண்களுக்குத் தந்தை. மூத்த பெண் தொல்பொருள் ஆராய்ச்சியில் மூழ்கியிருக்கிறார். இளையவர், கல்வித் துறையில் முதுகலைப் பட்டத்துக்குப் படித்துக் கொண்டிருக்கிறார்.

## டாக்டர் செல்லையா :

இந்த ஆண்டு பட்ஜெட் சமயத்தில், நமது காதுகளில் அடிக்கடி ஒலித்த பெயர் செல்லையா. நாடாளுமன்றத்தில் நிதியமைச்சர் மன்மோகன் சிங் நிகழ்த்திய பட்ஜெட் சொற்பொழிவில், செல்லையா கமிட்டியின் சிபாரிசுகளை மனத்தில் கொண்டுதான் பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருப்பதாக அறிவித்தார்.

இந்திய அரசின் நிதி அமைச்சகம் நியமித்த Tax Reforms Committee (செல்லையா கமிட்டி)யின் தலைவராகப் பொறுப்பேற்று, நமது நாட்டின் வரிகளில் பல மாற்றங்களைச் சிபாரிசு செய்துள்ள டாக்டர் செல்லையாவின் முழுப் பெயர், ராஜா ஜோசப் செல்லையா. நெல்லை மாவட்டத்தில் பாளையங்கோட்டையில் பிறந்து, கோவில்பட்டியில் தமது கல்வியைத் துவங்கிய டாக்டர் செல்லையாவின் தந்தை ஒரு வழக்கறிஞர். நிதித் துறையில் இந் நாட்டின் தலைசிறந்த நிபுணராகக் கருதப்படும் செல்லையா, திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியில் படித்துப் பொருளாதாரத்தில் முதுகலைப் பட்டமும் அமெரிக்காவின் பிட்ஸ்பர்க் பல்கலைக் கழகத்திலிருந்து டாக்டர் பட்டமும் பெற்றவர். திட்டக் கமிஷன் மற்றும் நிதிக் கமிஷன் உறுப்பினர் போன்ற பல பெரிய பதவிகளையும் வகித்துள்ளார். ஐ.எம்.எப். போன்ற ஸ்தாபனங்களிலும் பல பொறுப்புள்ள பதவிகளை வகித்துள்ளார். உருவில் சிறியவர், திருவில் பெரியவர் என்ற சொற்றொடருக்குப் பொருத்தமான உதாரணம் இவர்.


ராஜா செல்லையா



வரி விதிப்பு மாற்றங்கள் பற்றிய இடைக்கால அறிக்கையைச் சென்ற ஆண்டு டிசம்பர் மாத இறுதியில் சமர்ப்பித்த செல்லையா கமிட்டி, தற்பொழுது இறுதி அறிக்கையைத் தயாரிப்பதில் தீவிரமாக மூழ்கியிருக்கிறது. இந்தக் கமிட்டியின் சிபாரிசுகளை, இந்திய அரசு கொள்கையளவில் ஏற்றுக் கொண்டாலும், அவற்றை முழுமையாக அமுல் படுத்துவது அவ்வளவு எளிதல்ல. அரசியல் காரணங்கள் குறுக்கிடு கின்றன. ஆனால் டாக்டர் செல்லையாவோ, கமிட்டியின் சிபாரிசுகளை இந்த பட்ஜெட்டில் முழுமையாக அமுல்படுத்த முடியாததற்கு, அரசியல்ரீதியான எதிர்ப்புக்களை மட்டுமே காரணமாகக் குறிப்பிட முடியாது என்கிறார். தமது கமிட்டியின் சிபாரிசுகளில் சில நடைமுறைப் பிரச்னைகளும் உள்ளன என்றும், புதிய மாற்றங்களைக் கொண்டு வருவதற்குக் கால அவகாசம் தேவை என்றும் குறிப்பிடுகிறார். இன்னும் மூன்று, நான்கு ஆண்டுகளில் தமது கமிட்டியின் சிபாரிசுகள், படிப்படியாக அமுல்படுத்தப்படும் என்று எதிர்பார்க்கலாம் என்கிறார், டாக்டர் செல்லையா.

**வ**ரிகளில் சில மாற்றங்களைக் கொண்டு வருவதில் நிச்சயமாக எதிர்ப்பு இருக்கத்தான் செய்யும் என்பதை ஒப்புக் கொள்ளும் டாக்டர் செல்லையா, நாடாளுமன்றக் கூட்டத் தொடர் நடக்கையில் அதன் உறுப்பினர்கள் தினமும் படியாகப் பெறும் ஐநூறு ரூபாயின் மேலும், அரசாங்க அலுவலர்கள், மற்றும் பல பெரிய தனியார் துறை அதிகாரிகள் (Executives) அனுபவிக்கும் கார், வீடு போன்ற சலுகைகளுக்கும் ஒரு மதிப்பீட்டின் பேரில் ஏன் வருமான வரி விதிக்கக் கூடாது என்று கேட்கிறார். தொலைபேசி வைத்துக் கொண்டிருப்பவர்கள் மேல் சிறப்பு வரி விதிப்பதன் மூலம், இந் நாட்டின் கிராமப்புற பணக்காரர்களையும் நாம் வரி செலுத்த வைக்கலாம் என்பது போன்ற பல புதிய யோசனைகளைத் தமது இறுதி அறிக்கையில் (இரண்டு பாகமாக வெளிவர இருக்கிறது) குறிப்பிட்டிருக்கிறார்.

சி. சுப்பிரமணியம் மத்திய நிதியமைச்சராக இருந்த சமயத்தில், நிதி அமைச்சகத்தின் ஒத்துழைப்புடன் டாக்டர் செல்லையா, தில்லியில் National Institute of Public Finance and Policy என்ற ஸ்தாபனத்தை 1976

சே! தெருவெல்லாம் ஒரே குப்பை. வரியா, போய் பெட்டிஷன் குடுத்துட்டு வரலாம்?
சரி







ஆம் ஆண்டு துவங்கினார். 'செல்லையா இன்ஸ்டிடியூட்' என்றே எல்லோரும் குறிப்பிடும் அளவுக்கு இவர் பெயருடன் இணைந்துள்ள அந்த ஸ்தாபனத்தின் டைரக்டராகப் பல ஆண்டுகள் பணியாற்றிய இவர், தற்பொழுது இதே ஸ்தாபனத்தில் Emeritus பேராசிரியராக இருக்கிறார்.

நிதி விஷயங்களில் ஆராய்ச்சிகள் செய்யும் இந்த ஸ்தாபனம், 1986 ஆம் ஆண்டு நடத்திய ஆராய்ச்சி ஒன்றில், இந்நாட்டில் தாராளமாகப் புழங்கும் கறுப்புப் பணத்தை மதிப்பிட்டதோடல்லாமல், கறுப்புப் பணம் உருவாவதற்கான காரணங்களையும் ஆராய்ந்தது. கறுப்புப் பணத்தை வெளியே கொண்டு வர அரசாங்கம் இதுவரை எடுத்த முயற்சிகள் ஒன்றுமே பலிக்கவில்லை என்பதை ஒப்புக் கொள்ளும் இந்த நிதித் துறை நிபுணர், அரசு கறுப்புப் பணம் தோன்றுவதற்கான வழிகளை முறியடிக்கவும், வாய்ப்புக்களைக் குறைக்கவும் முயற்சி செய்ய வேண்டும் என்று யோசனை தெரிவிக்கிறார். தொழில், வர்த்தகத் துறைகளில் உள்ள பல்வேறு விதமான கட்டுப்பாடுகள், அதன் விளைவாகத் தோன்றும் லஞ்சம், ஊழல் இவையே கறுப்புப் பணம் உருவாவதற்கு முக்கிய காரணங்கள் என்று குறிப்பிடும் டாக்டர் செல்லையா, தற்பொழுது அரசாங்கம் கட்டுப்பாடு களைத் தளர்த்தியுள்ளதால், ஓரளவுக்கு நாட்டில் கறுப்புப் பணம் குறையலாம் என்கிறார். இறக்குமதி வரிகள், சொத்து வரி, ஸ்டாம்ப் டியூட்டி போன்ற ஏகப்பட்ட வரிகளும், மிக அதிகமான வரி விகிதங் களும் மக்கள் வரி செலுத்துவதைத் தவிர்க்க வழிவகுக்கின்றன என்றும் நினைக்கிறார் டாக்டர் செல்லையா.

இந்த அறுபத்தொன்பது வயதிலும் சுறுசுறுப்புடன் வேலை செய்யும் டாக்டர் செல்லையாவுக்கு இரு மகள்கள். மூத்தவர் சென்னையில் லேடி வெலிங்டன் மருத்துவமனையில், மருத்துவராகப் பணியாற்றுகிறார். இளைய மகள், ஒரு பன்மொழிப் புலவர்; அமெரிக்காவில் டெக்ஸாஸில் ஆராய்ச்சி செய்கிறார்.

சந்திப்பும் கட்டுரையும் :

ரமாமணி சுந்தர்

புகைப்படங்கள் :

செந்தில் ஆர். கணேஷ்

கார்ட்டூன் நன்றி :

ஹிந்துஸ்தான் டைம்ஸ்

## அடுத்த இதழில்...

●● திரையுலகுக்கு ஒரு டிக்கெட்!
- கவர் ஸ்டோரி

●● சுகப் பிரசவத்திற்கும் சிசேரியன் செய்யும் டாக்டர்கள்
- சிறப்புக் கட்டுரை

## இரட்டையரை மணந்த இரட்டையர்!

பாபு, சுபன் இருவரும் இரட்டையர். இருவரும் கேரளத்தைச் சேர்ந்தவர்கள். அரபு நாட்டில் பணியாற்றி வருகிறார்கள். விடுமுறையில் வந்திருந்த போது, இவர்களுக்குத் திருமணம் செய்யப் பெற்றோர் விருப்பம் தெரிவிக்க, இருவரும்,



"எங்கள் மனைவிமார்களும் இரட்டையர்களாக இருக்க வேண்டும்" எனக் கூறினார்கள். எனவே, பெற்றோர் விசாரித்து, சாந்தி, சைனோ என்ற இரட்டையரை இவர்களுக்குத் திருமணம் பேசி முடித்தார்கள். பாபு சாந்தியையும், சுபன் சைனோவையும் ஒரே முகூர்த்தத்தில் திருமணம் செய்து கொண்டனர். இதில் ஓர் ஆச்சரியம் என்னவென்றால், இந்த இரண்டு இரட்டையர்களின் வீடுகளுக்கும் இடையே உள்ள தூரம் ஆறு கிலோ மீட்டர் கூட இல்லை. இருப்பினும் தங்கள் வீட்டருகே இன்னொரு இரட்டைப் பிறவிகள் இருப்பது இந்தத் திருமணம் பேசி முடிக்கும் வரை இரு குடும்பத்தினருக்குமே தெரியாது!

- எஸ். எஸ். மணி

## பம்பாய்க் கடிதம் :



# சரத்பவாரின் ஊதாரிச் செலவுகள்!

மூத்த ராஜ்யசபா எம்.பி.யும், தொழிற் சங்கத் தலைவருமான ஏ.ஜி. குல்கர்னி அண்மையில் மறைந்த போது, அவருக்கு இறுதி அஞ்சலி செலுத்த நமது பாதுகாப்பு அமைச்சர் சரத் பவார் ஒரு தனி ஐ.ஏ.எஃப் விமானம் எடுத்துக் கொண்டு புனே விரைந்தார். புனே சென்ற பிறகுதான் தெரியவந்தது. பிரதமர் காங்கிரஸ் கட்சியின் காரியக் கமிட்டி கூட்டத்தை அன்று இரவே கூட்டுகிறார் என்று! அக்கூட்டத்தில் பங்கு கொள்ள, அதே தனி விமானத்தில் புதுதில்லி திரும்பினார். அக்கூட்டம் முடிந்ததும் குல்கர்னியின் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொள்ள, அன்று இரவே இரண்டாம் முறையாக அதே தனி விமானத்தில் வந்தார். இவ்விதம் கட்சிக் கூட்டத்திற்காக அவர் தனி ஐ.ஏ.எஃப் விமானத்தைப் பயன்படுத்தியது எந்த விதத்தில் நியாயம் என்று இங்கு விவாதிக்கப்படுகிறது! அரசின் சிக்கனம் பற்றிய பாடம் எல்லாம், மற்றவர்களுக்குத்தானா?

### கோவாவுக்கு ஒரு கப்பல் சர்வீஸ்

கோடைக்காலம் வந்தால் வெளிநாட்டு உல்லாசப் பயணிகளும், பம்பாய் வாசிகளும் கோவாவை நோக்கிப் படையெடுப்பது வழக்கம். பம்பாயிலிருந்து கோவாவிற்கு ரயில் வசதி சரியாக இல்லாததால், பயணிகள் பஸ்களிலும், விமானங்களிலுந்தான் போக வேண்டியிருக்கிறது. டிக்கெட்டுகளுக்கு ஏகப்பட்ட டிமாண்ட்! இதை மனத்தில் கொண்டுதான் பம்பாய் - கோவா கப்பல் சர்வீஸ் விடப்படுகிறது. காலை ஏழு மணிக்குக் கிளம்பும் இக்கப்பல், மாலை ஏழு மணியளவில் கோவாவைச் சென்றடையும். இடையில் ரத்னகிரியில் மட்டும் நிற்கும். தனி அறைகளும், சகலவசதிகளும் கொண்ட இக்கப்பலில் இருவித வகுப்புகள். இப்போது துவங்கப்படும் இந்த சர்வீஸுக்குக் கடல் பொங்கும் மழைக்காலத்தில் மட்டும் மூன்று மாதங்கள் ஓய்வு. கட்டணம் சற்றுக் கூடுதலாக இருந்தாலும், நெருக்கடியற்ற சுகமான பயணத்தைக் கொடுக்கும்.

### திடீர்க் கல்யாணங்கள்!

பாந்த்ரா ஸ்டேஷன் அருகே, ஒவ்வொரு 'ஜெராக்ஸ்' காப்பி எடுத்துத் தரும் கடையிலும் அமர்ந்திருக்கும் வக்கீல்கள் திடீர்க் கல்யாணங்கள் செய்து வைப்பதையே தங்கள் தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள்! வசதியில்லாக் குடும்பத்தினருக்கும், ஓடி வந்த காதலர்களுக்கும் தெருவிலேயே திருமணம் நடத்தி, அதை ரிஜிஸ்டிரார் ஆபிஸில் ரெஜிஸ்தரும் செய்து, அதற்கான சான்றிதழையும் வாங்கித் தருகிறார்கள். இதற்குக் கட்டணம் 150 ரூபாய். சற்று சிக்கலான விவகாரம் எனில், 750 ரூபாய் ஆகும்! உதாரணமாக, மணப்பெண் மைனர் என்றால் அவளை மேஜராகக் காட்டும் பொய் பிறப்புச் சான்றிதழை வாங்கித் தருகின்றனர்! ஒரு நாளைக்கு ஏறக்குறைய 50 கல்யாணங்கள் நடத்தப்படுகின்றன. இவர்கள் கைவசம் புரோகிதர்கள் (முஸ்லீம்களுக்குக் ஃகாஜிகள்), கல்யாணத்திற்கு சாட்சிக் கையெழுத்திட சாட்சிகள், என்று சகலமும் தயார்!

### பெருகிவரும் தற்கொலைகள்!

தற்கொலையால் சம்பவிக்கும் துர்மரணங்களுக்கு முதல் மூன்று இடங்களைப் பெறும் நகரங்கள் முறையே சென்னை பெங்களூர், பம்பாய்! பம்பாய் ஆஸ்பத்திரிகளில் ஒவ்வொரு நாளும் சராசரி 70 கேஸ்கள் தற்கொலை முயற்சியில் தோல்வியடைந்த பின் அட்மிட் செய்யப்படுகின்றன. கடந்த பத்தாண்டுகளில் தற்கொலைகள் 59.6% அதிகரித்துள்ளன. பம்பாய் கே.இ.எம் மருத்துவமனை, தற்கொலை முயற்சிக்குப் பின் இங்கு வருவோருக்கு மனோதத்துவ முறையில் சிறு வகுப்புகள் நடத்துகிறது. பெரும்பாலான தற்கொலை முயற்சிகள் தீராத வியாதியாலும், மாமியார் - மருமகள், கணவன் - மனைவி பூசல்களாலும் நடக்கின்றன. காதல் தோல்விக்கு மூன்றாவது இடம் தான்!

– ராஜீவி நரசிம்மன்

**35th House Full Day at MELODY A/C. Daily 3 Shows**




MUKUL S. ANAND  ANAND BAKSHI  LAXMIKANT PYARELAL

**AMITABH** **SRI DEVI, DANNY, NAG**

**ARUDRAA FILMS** Release, Ph : 444062

City Distributors : Gattani Films. Ph : 510027

சார்மினார் சானல்:

# ஓட்டுனரான ஓட்டப்பந்தய வீராங்கனை!

●● நக்சலைட்டுகளான PWG யினர், சமீபத்தில் நகரத்தின் மையத்திலான ஒரு சிறு ரயில்வே ஸ்டேஷன், டெலிபோன் அலுவலகம் ஆகியவற்றில் வெடிவைத்து பொது ஜனங்களுக்கு அதிர்ச்சி தந்தது. பழைய அமைச்சரான ஒரு காங்கிரஸ் காரரின் வீட்டை வெடி வைத்துத் தகர்த்தது காங்கிரஸ்காரர்களுக்குப் பெரிய இடி. ''நக்சலைட்டுகளுடனான போர் தொடங்கி விட்டது'' என்று முதல்வர் ஜனார்த்தன ரெட்டி அறிவித்தபிறகுதான் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் தொடர ஆரம்பித்தன. இப் போது PWG உட்பட எல்லா நக்சலைட் இயக்கங்களையும் முதல்வர் தடை செய்த நிலையில் என்ன நடக்குமோ தெரிய வில்லை!

●● தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத் தில் உள்ள பழைய தெலுங்கு நூல்களையும் பழைய ஓலைச் சுவடிகளையும் ஹைதரா பாத்திற்கே கொண்டு வந்து பாதுகாக்க ஓர் அருங்காட்சியகத்தை அமைக்கிற பணியில் ஆந்திர அரசு தீவிரமாக இறங்கப் போவதாக முதல்வர் ஜனார்த்தனன் ரெட்டி தெரிவித் திருக்கிறார். சரஸ்வதி மகால் கொடுக்குமா?

●● ஆறு வயதில் நெடும் கார் சவாரி செய்யும் ஹைதராபாத் ரித்விக், பெங்களூ ரில் தனது சாதனையைப் பத்திரிகையாளர் களுக்கு நிகழ்த்திக் காட்டின போது பெங்களூர்ப் போலீசாரால் பிடிபட்டுத் தண்டிக்கப்பட்டிருக்கிறான். சிறுவன் கார் ஓட்டத் தமது காரைத் தந்ததற்காக அவன் தந்தையும் அபராதம் கட்டி இருக்கிறார்.

●● ஓட்டப்பந்தய வீராங்கனை அஸ் வினி நாச்சப்பா, ''அஸ்வினி'' என்ற தெலுங்குப் படத்தில் ஓட்டப்பந்தய வீராங் கனையாகவே நடித்திருந்தார். டப் செய்யப் பட்டு தமிழ், மலையாளத்தில் வெளிவந் தது. தெலுங்கில் வெற்றி. அவருடைய சமீபத்திய படம் ''ஆதர்சம்''. இதில் ஆட்டோ ரிக்ஷா ஓட்டுபவராக நடித்திருக் கிறார். விறுவிறுப்பாகச் சண்டையும் போடு கிறார். பிரபல கதா நா ய க ர் க ளுக் கு இணை யாக நகரில் மட் டும் பன்னிரண்டு தியேட்டர் களில் இப்படம் ரிலீஸ் செய்யப்பட் டிருப்பதைப் பெருமையா கக் கருதுகிறார்.



●● நிஜாமா பாத்தில் திருட்டுக் குற்றத்தில் கைது செய்யப்பட்ட ஒரு வன் ஹைதராபாத் தில் நடந்த பல முக்கியத் திருட்டு கள் பற்றிச் சொல்லியிருக் கிறான். கூடவே போலீசின் பங்கு, அவர்களுக்குக் கொடுக் கப்பட்ட பணம் பற்றியும் சொல்லியிருக் கிறான். சம்பந்தப்பட்ட நான்கு போலீசா ரைத் தேடி ஒரு விசேஷக் குழு ஹைதராபாத் வந்திருக்கிறது. ஒரு போலீஸ்காரரைப் பிடித்து அவர் வீட்டைச் சோதனையிட அழைத்துச் சென்றபோது, அவர் தப்பித்து விட்டார். சம்பந்தப்பட்ட போலீஸ் ஸ்டே ஷனைச் சார்ந்த மற்ற மூவரும் தலைமறை வாகி விட்டார்கள். இப்போது போலீஸ் காரர்களையே போலீஸ் தேடுகிறது!

●● கல்லக்கூரி நாராயணராவ் என்ப வர் எழுதிய நாடகம் ''சிந்தாமணி''. 1921-ல் எழுதப்பட்ட இந்த நாடகம் ஆந்திராவின் மூலை முடுக்குகளிலெல்லாம் மேடை ஏறி யிருக்கிறது. ஒரு தேவதாசி. அவள் அழகில் மயங்கிய சுப்பி செட்டி என்ற பெரிய பணக்காரர் செல்வத்தை இழக்கிறார். இது தான் கதை. எழுபது வருடங்களுக்குப் பிறகு இந்த நாடகத்தைத் தடை செய்ய வேண்டும் என்று கோரி, இந்த நாடகக் கதாநாயகனின் ஜாதியைச் சார்ந்தவர்கள் பெரிய மாநில மாநாடு ஒன்றில் தீர்மானம் இயற்றிக் கிளர்ச்சி செய்து வருகிறார்கள்.

●● ''அசம்பவி ரவுடி'' என்ற தெலுங் குப் படம் வந்தபோது பெயரளவில் சர்ச்சை ஏற்படுத்தியது. எம்.எல்.ஏக்கள் அதைத் தடை செய்யக் கோரினார்கள். இப்போது ''ரௌடி இன்ஸ்பெக்டர்''! நாயகி விஜய சாந்திதான்!

- அப்பன்

# ஒரு புத்திசாலித்தனமான அடி



மார்ச் 31, 1992 வரை உங்களுக்கு கிடைத்துள்ள
மூலதன ஆதாயங்களுக்கு வரிவிலக்கு பெற

## ஐடிபிஐ

### முதலீட்டு பத்திரங்களில்

முதலீடு செய்யும் இறுதி வாய்ப்பு

**இத்திட்டத்தின் கீழ் முதலீடு செய்ய இறுதி தேதி செப்டம்பர் 30, 1992.**

நிலம், கட்டடம், ஆபரணங்கள், பங்குகள் போன்ற நீண்டகால முதலீட்டு ஆதாயத்திற்கு வருமான வரி உண்டு. ஆனால் இவ்வரியிலிருந்து விலக்கு பெற வாய்ப்பும் உள்ளது. உங்கள் மூலதனத்தை முழுமையாக பெற மற்றும் இதிலிருந்து லாபமும் பெற ஐ டி பி ஐ முதலீட்டு பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்.

- பத்திரங்கள் செப்டம்பர் 30, 1992, வரை சம விலையில் கிடைக்கும்.
- வருமான வரிச் சட்டம் 1961 பிரிவு 54E - ன் கீழ் மதிப்பீடு ஆண்டு 1992-93 க்கு மூலதன ஆதாயத்திற்கு வரிவிலக்கு உண்டு.
- வருடத்திற்கு 9% என்ற விகிதத்தில் 6 மாதத்திற்கு ஒரு முறை வட்டி வழங்கப்படும்.
- வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்களின் (நான்-ரெஸிடெண்ட்) முதலீடுகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால், 3 ஆண்டுகளுக்கான மொத்த வட்டியையும் தள்ளுபடி மு றையில் முன்னதாகவே ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்போது கழிக்கப்பட மாட்டாது.
- வெளியூர் காசோலை ஏற்றுக் கொள்ளப்பட்டு அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐ டி பி ஐ ஏற்றுக் கொள்ளும்.
- பிரிவு 80 L ன் கீழ் வருமான வரியில் லாபம்.

## நாட்டின் தொழில் வளர்ச்சியிலும் பெறும் பங்கு.



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபீசை அணுகுங்கள் அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்.

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், பம்பாய்-400 005. போன் : 218 9111/21.



# வானமே எல்லை

**ப**ல தமிழ்ப் படங்களைப் பார்த்து விட்டு வெளியே வரும் போது 'எங்கேயாவது போய்த் தற்கொலை பண்ணிக் கொண்டு விடலாமா' என்று கூடத் தோன்றத் தான் செய்கிறது. இந்நிலையில், தற்கொலைகள் பற்றியே எடுக்கப்பட்ட இந்தப் படத்தைப் பார்த்த பிறகு வாழ்க்கையில் பிடிப்பு முன்னிலும் அதிகமாகிறது என்றால், அதுதான் பாலசந்தர்!

'தோல்விகள் மட்டுமே இளைஞர்களின் தற்கொலை முயற்சிகளைத் தூண்டி விடுகின்றன என்பதில்லை; பெற்றோர்களின் மோசமான நடத்தையும் காரணம்' என்று சொல்ல விரும்பும் பாலசந்தர், அதற்கேற்ற சம்பவங்களை ஆரம்பத்தில் அமைக்கிறார் : லஞ்சம் வாங்கும் தகப்பன்; கட்டாயக் கல்யாண முயற்சி என்று இப்படி. இந்த இளைஞர்களும் யுவதிகளும் - நாலு பேர் - சொல்லி வைத்தாற்போல் ஒரே இடத்தில் வந்து இணைவது இயல்பானது அல்ல என்றாலும் இலக்கும் இலக்கியமும் அங்கேதான் ஆரம்பம்.

தற்கொலைக்குத் தேதி நிர்ணயித்து, 'அதுவரை உல்லாசம்' என்று தீர்மானிப்பவர்கள் மத்தியில், ஒருவனுக்கு மட்டும் வாழ வேண்டும் என்ற துடிப்பு. அதை மறைத்து, இவர்களோடு ஒத்துப்பாடி, 'சில தினங்களில் மனம் மாற்றி விடலாம்' என்று எண்ணி நடிக்கிறான். முடியாது போல் தோன்ற, தகப்பனார் உதவி நாடி, இறுதியில் வெற்றி பெறுகிறான். இந்தக் கதையைக் காவியமாக மாற்றியிருப்பவை டைரக்ஷனும் காமிராவும்.

மின்னல் வேகக் காட்சி மாற்றங்கள் டெம்போ கூட்ட, கறுப்புப் பணப் பெட்டி (சூழ்கி மறையும் வரை) மெலிதான சஸ்பென்ஸ் ஊட்ட, இயக்குனரின் ஆற்றலால் மிளிரும் இளைஞர்களின் நடிப்பு இதயத்தைத் தொட, படம் முழுவதும் ஓவியமாகப் படரும் இயற்கை எழில் இன்பக் கிளுகிளுப்பை ஏற்படுத்த, நேரம் ஓடிப் போனது என்பது படம் முடிந்து கைக் கடிகாரத்தைப் பார்க்கும் போதுதானே தெரிகிறது!

இன்று திரை உலகின் சம்பிரதாய ஃபார்முலாவாகக் கருதப்படும் ஆபாச நடனங்கள், இரட்டை அர்த்த வசனங்கள், வன்முறை, குருதி கொப்பளிப்பு என்று ஏதும் இல்லாதது மட்டுமல்ல; வாய்ப்பிருந்தும் பயன்படுத்தாதது பாலசந்தரின் துணிவு. அதனால்தான் ரயிலிலே நடந்த கற்பழிப்புக் கூட குற்றமற்ற நாலு வரி வசனத்துடன் முடிந்து போகிறது.

கவர்ச்சிக்காக பானுபிரியா வந்து கண்ணுக்கினிய ஒரு நடனம் ஆடுகிறார்; காமெடி டிராக் தனிதான் என்று உணர்த்த சிரிப்பு (?) நடிகர்கள் நடையாய் நடக்கிறார்கள்.

சிலுவையில் அறையப்பட்ட யுவர்கள், யுவதிகள்; ஸாக்ஸஃபோனில் கர்நாடக இசை; என்று பாலசந்தர் 'டச்சஸ்' ஏராளம் எனில், அவற்றுள் சிகரமானது கடைசி காட்சி. கண்கள் பனிக்காமல் இருக்க முடியாது.

''வானமே எல்லை'' என்றதும் தமிழக சட்டமன்றம் நினைவு வரும். அது அதிகார பலம் பற்றிப் பேச்சு; இது கே. பி.யின் ஆற்றலுக்கு நிரூபணம்.

- குட்டி கிருஷ்ணன்

# இன்று ஒன்பது மில்லியன் பேருக்குப் பிறந்த நாள்!

**அட, அப்படியா?**

!! உலகில் மிகவும் அதிகமாகச் சூட்டப்படும் பெயர் முஹமத்.

!! வடமேற்கு காஷ்மீர்ப் பகுதியில் வாழும் ஹன்ஸா (Hunza) பழங்குடியினருக்கு எவ்விதமான கான்ஸர் நோயும் வருவதில்லை.

!! ஓர் அமெரிக்க பிரஜை தம் ஆயுட் காலத்துக்கு உபயோகிக்கும் இயற்கை வளங்களை எண்பது இந்தியப் பிரஜைகள் தங்கள் ஆயுள் முழுதும் உபயோகிக்கிறார்கள். அதே போல் ஓர் அமெரிக்க பிரஜை தம் ஆயுட் காலத்தில் ஏற்படுத்தும் சுற்றுச்சூழல் மாசு, எண்பது இந்தியர்கள் தங்கள் ஆயுளில் விளைவிக்கும் மாசுக்கு ஒப்பானது.

!! இந்திய கிராமப்புறங்களில் 34 சதவிகிதக் குடும்பங்களும் நகர்ப்புறங்களில் 44 சதவிகிதக் குடும்பங்களும் ஒரே அறை கொண்ட வீடுகளில் வசிக்கின்றன... பம்பாய், தில்லி, கல்கத்தா, சென்னை ஆகிய நான்கு பெருநகரங்களில் சராசரியாக 67 சதவிகிதக் குடும்பங்கள் ஒற்றையறை வாசம் செய்கின்றன. கல்கத்தாவில் மட்டும் கணக்கெடுத்தால் 79 சதவிகிதக் குடும்பங்கள் ஒற்றையறையில் குடியிருக்கின்றன. சாலையோரத்திலேயே வாழும் ஏராளமான ஏழைகளின் எண்ணிக்கை இந்தக் கணக்கில் சேர்க்கப்படவில்லை.

!! ஜூலியஸ் சீஸர் காலத்தில் உலக ஜனத் தொகை 150 மில்லியன். இப்போதோ இரு ஆண்டுகளுக்கு ஒருமுறை உலக ஜனத் தொகையில் 150 மில்லியன் கூடுகிறது.

!! ஆஸ்திரேலியாவில் 14 மில்லியன் ஜனத்தொகை; அங்குள்ள செம்மறி ஆடுகளின் எண்ணிக்கையோ 145 மில்லியன்.



அயர்லாந்தில் நான்கு மில்லியன் செம்மறி ஆடுகள் உள்ளன. அதன் ஜனத்தொகை... மூன்று மில்லியனுக்குச் சற்று அதிகம்.

!! உங்கள் பிறந்த நாள் அப்படியொன்றும் சிறப்பு வாய்ந்த தினமல்ல... அதே நாளில் உலகில் சராசரியாய் ஒன்பது மில்லியன் பேர் உங்களைப் போலவே பிறந்தநாள் கொண்டாடிக் கொண்டிருப்பார்கள்!

!! உலகில் 65 சதவிகிதத்துக்கும் அதிகமானோர் செய்தித்தாள், டி.வி., ரேடியோ, டெலிபோன் போன்றவற்றைப் பயன்படுத்தாமலே காலம் தள்ளுகின்றனர்.

தொகுப்பு : உதய்லால்





# கல்கி



1992
ஜூன் 7
மலர் : 50
இதழ் : 45
ஆங்கீரச
வைகாசி 25

## பூனைக்கு மணி கட்டும் பிரதமர்!

கட்டுப்பாடுகளை நீக்கி, தொழில் துறையையும் பொருளாதாரத்தையும் சுதந்திரமாக இயங்கச் செய்த பிறகு, திட்டக் கமிஷனுக்கு என்ன வேலை? கலைத்தே விடலாம் என்பதுதான் உண்மை. ஆனால் திட்டக் கமிஷன் பழைய போக்கிலே ஐந்தாண்டுத் திட்டங்களை உருவாக்கிக் கொண்டிராமல், புதிய பாதையில் தனது சிந்தனையைத் திசை திருப்பி விட்டால், பயனுள்ள பணியாற்றுவதும் சாத்தியமே. இதைத்தான் பிரதமர் தேசிய அபிவிருத்தி கவுன்சில் கூட்டத்தில் எடுத்துக்காட்டியுள்ளார்.

'கட்டுப்பாடுகளை நீக்கி, மார்க்கெட் பொருளாதாரத்தை இயங்க அனுமதித்ததோடு அரசின் பணி முடிந்து விடாது' என்கிறார் நரசிம்மராவ். பண்டங்களின் உற்பத்தி பெருகும் போது, அதற்கேற்ப மக்களின் வாங்கும் சக்தி அதிகரிக்க வேண்டும். இல்லையெனில் உற்பத்தியில் மறுபடி கணக்கம் ஏற்படும். வாங்கும் சக்தி அதிகரிப்பது எனில், வேலை வாய்ப்புக்கள் பெருக வேண்டும்; அயல்நாட்டு மார்க்கெட்டுகள் விரிவுபடுத்தப்பட வேண்டும். இவ் விஷயங்களில் திட்டக் கமிஷன் நற்பணியாற்ற முடியும்.

நமது தேசத்தின் மிகப் பெரிய செல்வம் மனிதச் செல்வம்தான் என்பதை உணர்ந்து, அதற்கேற்ப திட்டக் கமிஷனும் அரசும் செயல்படுவது அவசியம். அரசின் வருவாய் இவ்வளவு, அதில் அபிவிருத்தித் திட்டங்களுக்கு ஒதுக்கப்படுவது இவ்வளவு, அதனை இன்னின்ன துறைக்கு இப்படி இப்படி பிரித்து அளிப்போம் என்று இதுநாள் வரை போடப்பட்டு வந்த திட்டம் உதவாக்கரைத் திட்டமாகும். நமது தேசத்தில் இத்தனை மக்கள் வேலையின்றி இருக்கிறார்கள், அவர்களுக்கு வேலை தர இத்தனை தொழிலகங்கள் தொடங்கப்பட வேண்டும், இதற்குத் திட்டமிட்டுத் தனியார் துறையின் ஒத்துழைப்பையும் பெற வேண்டும் என்கிற புதிய சிந்தனைதான் பயன்தரும். இதுதான் வாங்கும் சக்தி பெருகவும் உற்பத்தி அதிகரிக்கவும் பொருளாதாரம் செழிக்கவும் வழி.

'கட்டுப்பாடுகளைத் தளர்த்தியிருப்பதால் தொழிலகங்கள் அதிகரிக்க, வேலை வாய்ப்பு பெருகத்தானே செய்யும்' என்ற எண்ணம் ஓரளவே உண்மை. இன்று இறக்குமதிகளும் தடையின்றி அனுமதிக்கப்படுவதால் தானியங்கு இயந்திரங்களும் கம்ப்யூட்டர்களும் மிக அதிகமாக வந்து விட, அவற்றைப் பயன்படுத்தி லாபத்தை அதிகரித்துக் கொள்ளவும் தொழிலாளர் போராட்டங்களைத் தவிர்க்கவுமே முதலாளிகள் விரும்புவர். இதைக் குறைகூறிக் கொண்டிருப்பதற்குப் பதிலாக, 'வேலை வாய்ப்புக்களைப் பெருக்க என்ன வழி?' என்று பாஸிடிவ்வாகச் சிந்திக்க வேண்டும். எவ்வளவோ முன்னேறியுள்ள அமெரிக்காவில் கூட, வேலை வாய்ப்பை அதிகரிக்கும் தொழிலகங்களுக்குக் கூடுதல் சலுகை அண்மைக் காலத்தில் கூட அறிவிக்கப்பட்டது.

தவிர, தொழில் அபிவிருத்திக்கு அரசு செய்ய வேண்டிய அடிப்படைக் காரியங்களும் உள்ளன. சாலைகள், மின் உற்பத்தி, நீர்ப்பாசனம் முதலியன. இதற்குச் சமமான அளவில் முக்கியத்துவம் தரப்பட வேண்டிய அம்சங்கள், மக்களுக்குக் குடிநீர் வசதி, சுகாதார வசதி முதலியன. எல்லாவற்றையும் விட முக்கியம், சிறந்த பாடத் திட்டத்துடன் கூடிய கல்வி அனைத்து மக்களுக்கும் கிடைக்கச் செய்வதாகும். இது ஒன்றைச் செய்தாலே, இந்தியாவில் ஏராள பிரச்னைகள் என்ற நிலை மாறி, ஒருசில பிரச்னைகள் என்ற நிலை வெகுவிரைவில் தோன்றி விடும்.

இதையெல்லாம் உத்தேசித்துத்தான் 'திட்டமிடலும் மார்க்கெட் பொருளாதாரமும் ஒன்றுக்கொன்று அனுசரணையாக இயங்குமாறு நாம் மாற்றி அமைக்க வேண்டும்' என்று கூறி, தமது கருத்துக்களை விரிவாகவும் விளக்கியுள்ளார் பிரதமர். அவற்றிலெல்லாம் தலையாய சிறந்த யோசனை, உற்பத்திக்கு உதவாத அரசாங்க வீண் செலவினங்களைக் கட்டுப்படுத்தியே ஆக வேண்டும் என்பதுதான்.

பூனைக்கு மணி கட்ட அச்சமின்றி முன்வந்திருக்கிறார் பிரதமர். பொல்லாத பூனைகள் ஒத்துழைக்குமா என்பதுதான் கேள்வி!



நிலச் நீக்கம்



நாகேஷிடமா தோற்றார்!



ஒருருவாக...

## நீங்கள் கேட்டவை - தராசு

# 'ஜெ.' ஆட்சியில் எம்.ஜி.ஆர். புகழ் எப்படி உள்ளது?

● ஆர். விஜயராஜ், பெரியகுளம்.

? *அரசு விழாக்களில் கட்சி அரசியல் பேசலாமா?*

! பேசக் கூடாது என்பது ஒருபுறமிருக்க, அதை எடுத்துக் காட்டினால், 'ஏற்கெனவே கருணாநிதி பேசவில்லையா?' என்று திருப்பிக் கேட்பது அதை விட அபத்தமானது. நல்ல மரபுகளை நாம் உருவாக்க வேண்டுமே தவிர, ஏற்கெனவே நடந்த தவறுகளை நாம் தவறு செய்ய முன்னுதாரணங்களாகக் கொள்ளக் கூடாது.

● ஜி. சந்திரன் மதி, பாண்டிச்சேரி.

? *தபால் ஊழியர்கள் உபயம் : 'காம்பிளிமெண்டரி காப்பி' பத்திரிகைகள் வந்து சேர்வதில்லையே?*

! காம்பிளிமெண்டரி காப்பியை விடுங்கள்; சந்தாதாரர்களுக்கே பல சமயம் சரியாகப் போய்ச் சேருவதில்லையே!

● முட்டாள்தாசன், மந்தைவெளி.

? *தமிழக சட்டசபையில் ஆர். எம். வீ.யின் இலாகா பதவி நீக்கம் எதைக் குறிக்கிறது?*

! மந்திரி சபையிலிருந்துதான் நீக்கப்பட்டிருக்கிறார் நண்பரே, சட்டசபையிலிருந்து அல்ல. அது சரி, அது என்ன 'முட்டாள் தாசன்' என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறீர்? கேள்வியை நியாயப்படுத்தவா?

● கே. வி. ராசன், திருவண்ணாமலை.

? *விடுதலைப் புலிகள் விஷயத்தில் பண்ருட்டியார் தைரியமாக 'ஆதரிக்கிறோம்' அல்லது 'இல்லை' என்று சொல்ல ஏன் தயங்குகிறார்?*

! ஒரு பக்கம் புலிகள்; இன்னொரு பக்கம் தலைவர் ராம்தாஸ்; மூன்றாவது பக்கம் தடைச் சட்டம்... என்ன பண்ணுவார், பண்ருட்டி!

● நெல்லை வி. சிவா, அரசரடி.

? *கேரளாவில் ஜேசுதாசுக்கு எம். எல். ஏ.வுக்குரிய அந்தஸ்து வழங்கப்பட்டுள்ளதே, உங்கள் கருத்து?*

! நம் வேண்டுகோளெல்லாம் அவர் எம். எல். ஏ. மாதிரி நடந்து கொள்ளாமல் இருக்க வேண்டும் என்பதுதான்!

● கே. எம். தங்கராஜு, நாமக்கல்.

? *தாயின் சன்மான விருதை மகனுக்கே வழங்கியது பற்றி...?*

! இது ஒன்றும் புதிதில்லை; நேரு சமாதானப் பரிசை இந்திரா காந்திக்குக் கொடுத்தது நினைவில்லையா!

● வ. தே. பா., சென்னை. ❑

? *சீனா செல்லும் ஆர். வி. அவர்களால் உருவாக்கப்படும் நல்லுறவு அத்தியாயம் எப்படி இருக்கும்?*

! ஆர். வி. அங்கிருக்கும்போதே பூமிக்கடியில் பயங்கரமான அணுகுண்டுச் சோதனை நடத்திய சீனர்களை நம்ப முடியாது என்றாலும் நல்லுறவு முயற்சிகளைத் தொடரத்தான் வேண்டும். கூடவே எச்சரிக்கையும் தேவை.

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? *" 'நடிகர் நாகேசுக்குக் கிடைக்கும் மரியாதை கூட எனக்குக் கிடைப்பதில்லை" என்று நெடுஞ்செழியன் கூறியுள்ளாரே?*

! அதென்ன, நாகேஷை அவ்வளவு மட்டமாக எடை போட்டு விட்டார், நிதியமைச்சர்!

● வே. சிவராகவன், திருச்சி.

? *'புத்திரகாமேஷ்டி யாகம் மூடநம்பிக்கை' என்று விமர்சித்து எழுதும் தகுதியைத் தங்களுக்கு யார் வழங்கியது?*

! இந்தக் கேள்வியை எழுப்பும் உரிமையை உங்களுக்கு வழங்கிய அதே அரசியல் சாசனம்தான் எனக்கும் கருத்துச் சுதந்திரத்தைக் கொடுத்தது.

● மா. பழனிசாமி, கோவை.

? *கொலைகாரி தனுவின் செயலைப்*

பாராட்டி நோட்டீசுகள் விசப்பட்டது குறித்து?

! ஸ்ரீபெரும்புதூரில் சே நா ட் டீ சு, போஸ்டர், கும்பகோணம் டீவி ஒலிபரப்பு மையத்தில் குண்டு வெடிப்பு. வடக்கே தனுவின் படத்துக்கு ஊதுவத்தி ஏற்றிக் கும்பிடுவதாகவும் ஒரு செய்தி. இந்த வன்முறை வழிபாடு நல்லதுக்கல்ல.

● ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்.

*? அரசு நிலத்தை அநியாயமாய் ஆக்கிரமிப்பவர்களைத் தமிழக அரசு குண்டர்கள் சட்டத்தில் கைது செய்யப் போகிறதாமே?*

! ஒருவேளை 'தனியார் நிலத்தை அநியாயமாய் ஆக்கிரமியுங்கள்; கண்டுகொள்ள மாட்டோம்' என்று அரசு சொல்லிக் கொடுக்கிறதோ, என்னவோ!

● பா. உதயகண்ணன், சென்னை.

*? 'ஜெ' ஆட்சியில் எம்.ஜி.ஆர். புகழ் இப்போது எப்படி உள்ளது?*

! பேச்செடுத்தால் வெளியேற்றப்படும் நிலையில் உள்ளது.

● எம். ஜாபர்ஸலாம், திட்டச்சேரி.

*? ஆபாசப் பேச்சாளர்கள் அ. தி. மு. க. விலும் இருக்கிறார்களே, அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுமா?*

! 'மாமியார் உடைத்தால் மண் குடம் மருமகள் உடைத்தால் பொன் குடம்' என்பது துக்ளக்குக்குத்தான் தெரியவில்லை என்றால் உங்களுக்குமா!

● மாரி வெற்றிவேல், பட்டுக்கோட்டை.

*? இன்றைய அரசியல் கதாநாயகன், கதாநாயகி, வில்லன், சிரிப்பு நடிகர், நடிகை யார், யார்?*

! சென்னை தரமணியில் சினிமா நகரம் உருவாக்கித் தனிப் பெரும் சாதனை புரியப் போகும் ஜெதான் நீங்கள் குறிப்பிடும் எல்லோரையும் உள்ளடக்கி ஒருருவாக நிற்கிறாரே!

> ❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
> வ. தே. பாலசுப்பிரமணியன்,
> 15, வெள்ளாள தெரு.
> சென்னை - 600 029.

● கே. ஆர். விஜயா, கோவை.

*? 'பாக்' அயல் விவகாரக் காரியதரிசிக்கு டில்லி அழைப்பு விடுத்திருப்பது சரியா?*

! மிட்டல் விவகாரத்தைக் காரணம் காட்டி, அயல் விவகாரத் துறை செயலர்கள் மட்டத்தில் நடக்கவிருந்த பேச்சு வார்த்தைகளை டில்லி ரத்து செய்து விட்டது. மிட்டல் இப்படி கொடுமைப் படுத்தப்பட்டது இங்கு நடந்த ஒரு காரியத்துக்குப் பழிவாங்கல் நடவடிக்கைதான் என்பதும் அம்பலத்துக்கு வந்திருக்கும் போது, பேச்சு வார்த்தை ரத்து உசிதமாகத் தோன்றவில்லை. தூதரகம் கண்டுகொள்ளாதிருக்க, உளவு நடவடிக்கை பாட்டுக்கு நடந்து கொண்டே இருப்பது என்பது பெரும்பாலான நாடுகள் இன்று கடைப்பிடிக்கிற காரியமாகி விட்டது. சந்தேகங்களும் விரோத பாவங்களும் குறையத் தானே பேச்சு வார்த்தையே. அதை ரத்து செய்வதால் என்ன லாபம்?

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? இன்றைய இந்தியாவுக்கு எது வேண்டும்? எது வேண்டாம்?*

! கலிஸ்தானுக்குப் போராடுகிறேன் பேர்வழி என்று கூறிக் கொண்டு ஆற்றல் மிக்க இளம் இன்ஜினியர்களைக் (தமிழர் உள்பட) கொலை செய்யும் கோழைத்தனம் வேண்டவே வேண்டாம். நோயுற்ற மனத்தை உணர்த்தும் இந்தக் கொலை வெறி ஒழிய இதயம் திறந்த ஆக்கபூர்வமான பேச்சு வார்த்தைகளும் இருதரப்பிலும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் வேண்டும், வேண்டும்!

☛ சீன நல்லுறவு



☛ [illegible]



☛ நாயகன்



# ரகசியமாய்ச் சிரிக்கிறார் ஹர்ஷத் மேத்தா!

மூன்று வாரங்களுக்கு முன்னால் (17.5.92 கல்கி) ஹர்ஷத் மேத்தாவின் திருவிளையாடல்கள் பற்றி எழுதியிருந்தேன். அன்றையத் தேதியில் இந்த கோல்மாலில் சம்பந்தப்பட்டிருந்த பணம் ஸ்டேட் பாங்கின் 600 கோடி ரூபாய் மட்டுமே என்று எண்ணியிருந்தோம். ஸ்டேட் பாங்கைப் பொருத்தமட்டில் கோல்மால் நடந்திருந்தபோதிலும் இப்போது கடன் பத்திரங்களை அதனிடம் ஹர்ஷத் மேத்தா ஒப்படைத்து விட, கணக்கு நேராகி விட்டது. ஆனால் தொடர்ந்து தெரியவரும் பல விவரங்கள், ஹர்ஷத் மேத்தாவுக்கு வேறு பல வங்கிகளுடனும் தொடர்பு இருந்தது என்பதையும் சந்தேகத்துக்குரிய காரியங்கள் பல நடந்துள்ளன என்பதையும் வெளிச்சத்துக்குக் கொண்டு வருகின்றன. வங்கித் துறையும் பங்கு மார்க்கெட்டும் செயல்படும் விதம் அதிர்ச்சி அளிப்பதாக இருக்கிறது எனில், இவற்றின் மீது ரிஸர்வ் வங்கி போதிய அளவு கட்டுப்பாடு செலுத்தவில்லை, கவனக்குறைவாக இருந்திருக்கிறது என்பது அதைவிட அதிர்ச்சி அளிப்பதாக உள்ளது.

வங்கிகளின் பணி என்ன? தனிநபர்களின் சேமிப்புக்களைத் திரட்டி, தொழிலும் வர்த்தகமும் முன்னேற அதனைக் கடனாகத் தந்து, லாபம் பெறும்போதே நாட்டின் வளர்ச்சிக்கும் உதவுவதுதான். வங்கிகள் லாபகரமாகத்தான் நடக்க வேண்டும். என்றாலும், லாபம் பெறுவது மட்டுமே நோக்கமாக இருக்கக் கூடாது. வங்கிகள் பல அரசுடைமையாக்கப்பட்ட போது இதைத்தான் சொன்னார்கள். 'மக்களுக்குச் சேவை புரிவதே முக்கியம்' என்றார்கள்.

ஆனால் தற்போது அரசுடைமையான பல வங்கிகள் மட்டுமின்றி, சில அயல்நாட்டு வங்கிகளும் கூடப் பேராசையுடன் லாப நோக்கத்தையே பி ர தா ன மா கக் கொண்டு இயங்கியுள்ளன. அப்படிச் செயல்பட்ட போது, போதிய பாதுகாப்புக்களை மேற்கொள்ளாமல் மக்களின் சேமிப்புப் பணத்தை - கோடிக்கணக்கான ரூபாய்களை - பேராபத்துக்கு உள்ளாக்கியுள்ளன. இதனால் வங்கிகளுக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் ரூ 1000 கோடி என்று குறைந்தபட்சமாக மதிப்பிடப்பட்டுள்ளது. மேலும் பல கோல்மால் விவரங்கள் தெரியவரும்போது இந்த மதிப்பீடு மேலும் உயரலாம்!

தேசிய வீட்டு வசதி வங்கி, கடன் பத்திர கோல்மாலில் 300 கோடி அளவுக்கு ஈடுபட்டிருக்கிறது என்ற விவரம் தெரிய வந்த போது, அதன் தலைவர் அவசர அவசரமாக ராஜினாமா செய்தார். அப்படி ராஜினாமா செய்த சில நாட்களுக்குள் 'ஹார்ட் அட்டாக்' வந்து இறந்தும் போனார். அவர் உயிருடன் இருந்தால் மேலும் பல அக்கிரமங்கள் வெளிச்சத்துக்கு வந்திருக்கும் என்பதாக இப்போது வதந்தி உலவுகிறது. இது அதிர்ச்சி அளிப்பதுதான் என்றாலும், இதைவிடப் பெரிய அதிர்ச்சி என்னவெனில், பாரத நாட்டின் ஷேர்மார்கெட் முழுவதும், வங்கிகள் அத்தனையும் கடந்த பல காலமாகவே ஒரு தனிமனிதனை வலம் வந்து தொழுது, அவன் ஆட்டுவித்தபடியெல்லாம் ஆடியிருக்கின்றன என்பதுதான்! அரசும் ரிஸர்வ் வங்கியும் உருவாக்கியுள்ள கட்டுப்பாடுகளையெல்லாம் அர்த்தமற்றதாக்கி, ரகசியமாக எள்ளி நகையாடிக் கொண்டிருந்தார் ஹர்ஷத் மேத்தா.

சமீபத்தில் பொருளாதாரக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டதால் அயல்நாட்டு இந்தியர்கள் இங்கே முதலீடு செய்ய முன்வருவார்கள் என்று நிதி அமைச்சர் ஆசையோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். ஆனால் நமது வங்கிகளும் ஷேர் மார்க்கெட்டும் இப்போது நடந்து கொண்டிருக்கும் விதம், அயல்நாட்டு இந்தியர்களுக்கு நமது பொருளாதாரத்தின் மீது கொஞ்ச நஞ்சம் இருந்த நம்பிக்கையையும் குலைத்து விட்டிருக்கிறது. 'ஒரு சில தனி மனிதர்கள் திட்டமிட்டு இரவோடு இரவாக கோடீசுவரர்களாக மாற உதவும் வகையில் வங்கிகளும் பங்கு மார்க்கெட்டும் இங்கு செயல்பட முடியும் என்றால், ரிசர்வ் வங்கி என்பதாக ஒன்று எதற்கு? அரசாங்கம்தான் எதற்கு?' என்று மேல்நாட்டவர் கேட்க ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்கள் இந்தியாவில் எப்படி, எந்த நம்பிக்கையின் பேரில் முதலீடு செய்ய முன்வருவார்கள்?

''அதிர்ச்சி வைத்தியம்'' என்பதாக முன்பு நேருஜி அடிக்கடி சொல்வார். இப்போது நா ட் டி ன் பொருளாதாரத்துக்கு அதிர்ச்சி அளித்திருக்கிறார் ஹ ர் ஷ த் மேத்தா. ஆனால் அது வைத்தியம் அல்ல. குண்டாந்தடித் தாக்குதல்!

– வி. கோபாலன்

# உங்கள் பால்காரர் இரவு 10 மணிக்கு பால் கொண்டு தருவாரா?

என் பால்காரர் தருவார்

உங்கள் மகன் இரவு வெகுநேரம் படிக்க விரும்புகிறான். அவனுக்கு காப்பி வேண்டும். பாட்டியோ இரவு சாப்பாட்டுக்குப் பதிலாக பால் வேண்டும் என்கிறார். அந்த நேரத்தில் எங்கு சென்று பால் வாங்குவீர்கள்? அமுல் மில்க் பவுடர் கைவசம் வீட்டில் வைத்திருங்கள். கவலையே இருக்காது. பால் தாமதமாக வராது. தீர்ந்து போகாது. திரிந்தும் போகாது.

அமுல் மில்க் பவுடர் கொண்டு தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா... எது வேண்டுமோ தயாரிக்கலாம்.

## அமுல் மில்க் பவுடர்

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**



Marketed by: Gujarat Co-operative
Milk Marketing Federation Ltd., Anand 388 001



# 9

# நிலா

## சுபா

பன்னிரண்டு மணி வெயிலில் அந்தப் பூங்காவிற்கு வருகிறவர்களைக் கேட்டருகில், ஆலமர நிழலில் படுத்திருந்த நாய் ஒன்று, தலை உயர்த்தி விநோதமாகப் பார்த்து விட்டு, மறுபடி தலையைத் தாழ்த்திக் கொண்டது.

நந்தினியும், புவனாவும் பார்க்கில் நுழைந்தார்கள். நந்தினியின் பொறுப்பில் புவனாவை விட்டிருந்த தேவராஜ், காலையில் எழுந்தவுடன் முந்தின நாள் வீட்டில் எதுவும் நடக்கவில்லை என்ற பாவனையில் ஷேவ் செய்து, குளித்து, உடையணிந்து, சாப்பிட்டு வழக்கம் போல் புறப்பட்டுப் போய் விட்டான்.

புவனா இரவு முழுவதும் தூங்கவில்லை என்பது அவ்வப்போது அதிர்ந்த அவளது உடல் மூலம் நந்தினி தெரிந்து கொண்டிருந்தாள். தேவராஜ் பக்கத்தில் படுத்திருக்கும் போது, அவளால் அப்போது புவனாவிற்கு எந்த ஆறுதலும் சொல்ல முடியவில்லை.

இப்போது கூட புவனா மௌனமாகத்தான் வந்து கொண்டிருந்தாள். பார்க்கில் வேலையற்ற இரண்டு பேர் இரண்டு மர நிழல்களில் சுருண்டு கிடந்தார்கள். அலங்கார நீரூற்று ஒன்று நீரின்றிக் காய்ந்து போயிருக்க, மரங்களில் இருந்து உதிர்ந்த இலைகள், போர்வையாகச் செயற்கைக் குளத்தின் தளத்தை மூடியிருந்தன.

ஒரே ஒரு யூகலிப்டஸ், மேகங்களை நலம் விசாரித்தது. அசோக மரங்கள் அதற்கு இணையாக வளர முயற்சி செய்தன. ஓணான் ஒன்று சருகு இலைகள் சலசலக்க ஓடி, ஓர் அரசின் அடிமரமேறி நின்று அவர்களைப் பார்த்துத் தலையசைத்தது.

நந்தினி கைப்பிடி உடைந்த ஒரு சிமெண்ட் பெஞ்ச்சில் இருந்த தூசியைத் தன் புடைவைத் தலைப்பால் தட்டினாள்.

''உக்காரு'' என்றாள் புவனாவிடம்.

புவனா மறு பேச்சின்றி நந்தினி காண்பித்த இடத்தில் உட்கார்ந்தாள்.

''சொல்லு.''

''என்னண்ணி சொல்லணும்?''

''ஏன் உம்னு இருக்கே? ஏன் சாப்பிடலை? ஏன் எங்கூடப் பேசலை?''

''உனக்குத் தெரியாதா அண்ணி? நான்தான் ஒங்கிட்ட முன்னாலேயே சொன்னேன்ல. எப்படியாவது அண்ணன்கிட்டப் பேசி இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதம் வாங்கிக் குடுக்கச் சொல்லி?''

''நான் முடியாதுன்னா சொன்னேன்? நான் உங்கண்ணன் கிட்டப் பேசறதுக்குள்ளே நீயே அவனோட அவர்கள்ல வுழுந்துட்டே.''

''அண்ணன் எக்ஸிபிஷன்ல பொம்மைக் கடைல வந்து உக்காந்து வியாபாரம் பண்ணுவார்னு எனக்கு ஜோசியமா தெரியும்?''

''அவர் வேலை செய்ற டயர் கம்பெனிதான் அந்த ரப்பர் பொம்மைங்களையும் செய்யுதாம். அதனால இவரை எக்ஸிபிஷன் ஸ்டாலுக்கு ஸ்பெஷல் டூட்டியில அனுப்பியிருக்காங்க.''

''அனுப்பட்டும். இவரும் போவட்டும். அங்க என்னை இன்னொருத்தரோட பாத்துட்டாருங்கறதுக்காக என்னைக் கை நீட்டி அடிக்கலாமா?''

''ஒன் நல்லதுக்குத்தானேம்மா புவனா.''

''இதபாரு அண்ணி. நீ அண்ணனுக்குப் பரிஞ்சி பேசப் போறேன்னாச் சொல்லிடு. திரும்பிப் போயிடலாம். எனக்காகவும் பேச வேணாம். அவருக்காகவும் பேச வேணாம். நியாயத்துக்குப் பேசு. இவரு என் கல்யாணத்துக்காகப் பையனைத் தேடறேன்னு எத்தனை வீட்டு வாசல்படி ஏறி எறங்கணும்? எவ்வளவு ஜாதகம் பாக்கணும்? வரதட்சணை, சீர், செனத்தின்னு எவ்வளவு கவலைப்படணும்? அந்தக் கஷ்டமெல்லாம் வெக்காம நானே ஒரு பையனைத் தேடிக்கிட்டா தப்பா அண்ணி?''

''இதுக்கு என்னால பதில் சொல்ல முடியல புவனா. சின்னவங்களுக்கு நல்லது கெட்டது சரியாத் தெரியாது. அவசர ஆத்திரத்தில அவங்க ஸெலக்ட் பண்ணுவாங்க. அது ஒத்துவராதுன்னு பெரியவங்க நெனைச்சிக்கிறாங்க. 'வாழப் போறது நாம. நம்ப மனசுக்குப் புடிக்காம, ஒத்துப் போவாம எதையும் செஞ்சிடுவோமா'ன்னு சின்னவங்க நெனைக்கறாங்க.''

''சின்னவங்க நெனைக்கறதுதாண்ணி கரெக்டு. ஏன் போன வருஷம் சித்தப்பா அவர் பொண்ணுக்கு அமெரிக்காலேர்ந்து மாப்பிள்ளை கொண்டாந்தாரே. என்ன ஆச்சாம்? பையனுக்கு ஏற்கெனவே ஒரு அமெரிக்கப் பொண்ணோட கல்யாணம்

ஆயிருச்சின்னு தெரிஞ்சி டலை. அத விடு. என் ஃப்ரண்டு வனஜாவோட அம்மா லவ் மேரேஜ்தான். அவங்கப்பா பிருதிவி ராஜன் மாதிரி மோட்டார் பைக்ல கடத்திக் கிட்டு வந்து கல்யாணம் பண்ணிக் கிட்டிருக்காரு. நல்லாத்தானே இருக்காங்க. வனஜா கூட ஒரு டாக்டர் பையனை லவ் பண்றா. அவங்க வீட்ல ஓகே சொல் லிட்டாங்க.''

''நீ எங்கிட்ட பேசறியா? உங்கண்ணன்கிட்ட பேசறியா?''

''ஒங்கிட்ட பேசினா அண்ணங்கிட்ட போகும்னு நெனைச்சித் தான் பேசறேன். எனக்கும் ஓட்டுப் போடற அளவுக்கு வயசாய்டிச்சி. நான் இன்னும் கொழந்தையா, சோறு



# மயக்கம்

எது, மண் எதுன்னு புரியாம எடுத்துச் சாப்ட்ருவேன்னு நெனைக்கறதுக்கு?''

''அம்மாடி. நீ நெறையப் பேசறே. நான்லாம் ஓம்மாதிரி இவ்வளவு பேசினதே இல்லை.''

''நீயும் லவ் பண்ணியிருந்தாப் பேசி யிருப்பேன்னி.''

லவ் பண்ணியும் கூடத்தான் பேச வில்லை என்று நினைத்துக் கொண்டாள் நந்தினி. புவனாவா இப்படி பாயின்ட் பாயின்டாகப் பேசுகிறாள் என்று ஆச்சரிய மாய் இருந்தது. அவளைப் பார்க்கிற்கு இழுத்து வந்ததன் காரணமே வீட்டில் வெளிப்படையாகப் பேசச் சுதந்திரம் கிடைக்காது என்பதால்தான். டெய்லர் கடையில் இருந்து புவனாவின் ரவிக் கையை வாங்கி வர வேண்டும் என்ற ஒரு நொண்டிச் சாக்குடன் நந்தினி அவளைத் தன்னுடைய சொந்த ஜாமீனில் வெளியே கூட்டி வந்திருந்தாள். புவனாவை வெளியே கூட்டி வரும்போதே அவள் மனத்தில் ஒரு தீர்மானம் உருவாகி இருந்தது.

''இங்க பார் புவனா. நான் சொல் றதைக் கொஞ்சம் கேக்கறியா?''

புவனா வார்த்தை எதுவுமின்றி நந்தி னியை நிமிர்ந்து பார்த்தாள். முகம் உயர்ந்த தால் நீளமாகத் தெரிந்த புவனாவின் கன்றுக் குட்டிக் கழுத்தை வருடிவிட வேண்டும் போல் இருந்தது. புவனாவின் பார்வையில் இருந்த ஏக்கத்தைப் பார்க்கும் போது, மனுவின் மடியில் தஞ்சம் புகுந்த புறாவின் நினைவு வந்தது அவளுக்கு. மான்குட்டி போல் இருக்கும் இவளுடைய வாழ்க்கை அண்ணவின் வற்புறுத்தலுக்காகப் பாலை வனம் போல் ஆகி விட்டால், புவனா சாகிற வரைக்கும் குற்றம் சாட்டும் பார்வை யுடன்தான் தன்னைப் பார்த்துக் கொண் டிருப்பாள். இவளாவது சிரிக்க வேண்டும்.

''அண்ணனைப் பத்தி ஒனக்கு நல்லாவே தெரியும். கோவக்காரரு. லவ் வுன்னாலே புஸ்தகம், சினிமா இதிலெல் லாம் வர கெட்ட விஷயம்னு நெனைக்கற வரு.''

''அதனால?''



"படத்துல காதலர்களையும், விட்டு வசதி வாரியக் குடியிருப்புகளையும் மாத்தி மாத்திக் காட்றாங்களே, ஏன்?"

"காதலர்களிடம் அன்பு விரிசல் விட்டுடுச்சுன்னு டைரக்டர் சிம்பாலிக்காச் சொல்றாராம்!"

– எஸ். முகம்மது ஜூகப்

"இரு பொரியாதே. வாய் வார்த்தையா இருக்கறப்பவே சூடாயிடறே, பார்! அந்தப் பையன் ஷ்யாம்சுந்தர் மேல ஒனக்கு நம்பிக்கை இருக்கா?"

"என்னண்ணி இப்படியெல்லாம் வில்லியாக் கேட்டுக்கிட்டு?"

"நீ வெறும் லவ் மயக்கத்திலேயே இருந்துடக் கூடாதும்மா. லவ்வோட முடிஞ்சிடாது வாழ்க்கை. பசிங்கறது காதலுக்கு முன்னாலயும் இருக்கும். பின்னாலயும் இருக்கும். அதான் கேக்கறேன். எந்தக் கம்பெனில வேலை செய்றான்னு சொன்னே?"

"மெட்றாஸ் பார்மாசூட்டிகல்ஸ். நல்ல மருந்துக் கம்பெனி அண்ணி. அந்தக் கம்பெனி போட்ட கிஃப்ட் ஆர்ட்டிகிள்ஸ் எவ்வளவு குடுத்திருக்காரு தெரியுமா. லெட்டர் ஹெட். பென் ஸ்டாண்ட். பிளாஸ்டிக் காலண்டர்."

"அப்ப நீ வீட்டை விட்டுப் போய்க் கல்யாணம் பண்ணிக்கறதுதான் நல்லது."

"அண்ணி..."

"அண்ணன்கிட்ட பர்மிஷன் வாங்க முடியாது. அந்த வழில ஒங்காதல் கல்யாணம் நடக்காது. கோயிலோ, ரிஜிஸ்ட்ரார் ஆபீசோ எங்கயாவது கல்யாணம் நடக்கட்டும். கல்யாணம் முடிஞ்சி, கொழந்தை குட்டின்னு ஆயிட்டா உங்கண்ணன் கோவமெல்லாம் போய்டும்."

"இதான் வழியாண்ணி?"

"ஒரே வழி."

அந்தப் பேச்சு வார்த்தை நடந்து முடிந்து ஐந்து நாட்களுக்கு புவனா வெளியே எங்கேயும் போய் வந்த மாதிரியே தெரியவில்லை. ஒரு பக்கம் மாமியார், புவனாவைத் தன் கண் பார்வையிலிருந்து நழுவவே விடவில்லை. நந்தினி ஆபீசுக்குப் போகலாம் என்று தேவராஜ் அனுமதி வழங்கியதன் பேரில் அவள் ஆபீசுக்குப் போனால் - போன அன்றைக்கே காலை பதினோரு மணிக்கு அவள் வீட்டுக்கெதிரே ஷ்யாம்சுந்தர் வந்து நின்று வசீகரமாகச் சிரித்தான்.

"புவனா உங்களை வந்து பாக்கச் சொன்னா."

"அவ எப்ப உங்க கிட்ட சொன்னா?" என்று வியப்பை மறைக்காமல் கேட்டாள் நந்தினி.

"இதெல்லாம் எதிர்பார்த்துத் தானே லவ்வுலேயே எறங்கறோம். உங்க வீட்டுக்குத் துணி ஐயர்ன் பண்ணிக் கொடுக்க மொபைல் லாண்டிரிப் பையன் வரான்ல. அவன் மூலமா நான் நியூஸ் அனுப்பிச்சேன். பதில் வந்தது. வந்துட்டேன்."

ஷ்யாம்சுந்தர் காதல் கோழை இல்லை. தைரியசாலிதான். புவனாவை வைத்து அவன் காப்பாற்றுவான் என்று தோன்றியது. அவனும் புவனாவும் இணைந்து வாழ்க்கை நடத்துகிற மாதிரி கூட ஒரு கற்பனைக் காட்சி அவள் மனத்தில் ஃப்ரேமாகத் தொங்கியது.

"நீங்க புவனாவை ரெஜிஸ்தர் கல்யாணம் பண்ணிக்குவீங்களா?"

"ஓ யெஸ்."

"அப்பா அம்மா?"

"கல்யாணம் பண்ணிக்கிட்டு ரிசப்ஷன் வைப்பேன்ல. அப்ப அவங்களையும் கூப்புடுவேன். வந்தா வரட்டும். வரலன்னா போகட்டும். எப்படியும் பேரக் கொழந்தையைக் கொஞ்ச வந்துதானே ஆகணும். நான் அப்பா, அம்மாவுக்கு ஒரே பையன் மேடம். எங்க வீட்லயும் தகராறுதான். லவ்வுனு வந்துட்டாலே பேரன்ட்ஸுக்கும் பசங்களுக்கும் இந்தியா - பாகிஸ்தான் சண்டைதான். அன்னிலேர்ந்து இன்னி வரைக்கும் மாறவே இல்லை."

"கல்யாணத்துக்கு அப்புறம் பொறுப்பா இருந்துக்குவீங்கல்ல?"

"ஹண்ட்ரட் பர்ஸன்ட்."

"நல்ல நாள் பாத்து நானே புவனாவை அனுப்பி வைக்கறேன்."

"தேங்க்யூ மேடம்."

"அதுக்குள்ள ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்ல விசாரிச்சி வைங்க."

"விசாரிச்சாச்சு. சைதாப்பேட்டை ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ் நோட்டீஸ் போர்டுல என் அப்ளிகேஷன் தொங்குது. முப்பது நாள்ல யாரும் அப்ஜெக்ஷன் சொல்லலைன்னா கல்யாணம் பண்ணிக்கலாம். அப்ளிகேஷனை கொஞ்சம் மறைப்பாத் தொங்க விடச் சொல்லி பியூனுக்குக் கொஞ்சம் மால் அழுத்தியிருக்கேன். பொண்ணு வர வேண்டியதுதான் பாக்கி" என்று சொல்லி விட்டு, அவளுக்கும் அவன்

செலவிலேயே ஜூஸ் வாங்கிக் கொடுத்து விட்டுப் போனான், ஷ்யாம்சுந்தர்.

அன்றைக்குப் பதினைந்தாவது நாள் தேவராஜ் வீட்டிற்கு வரும்போதே தன்னை பெங்களூர் கிளைக்கு மாற்றியிருப்பதைச் சொல்லிக் கொண்டு வந்தான். எக்ஸிபிஷனில் பொம்மை விற்கிற வேலையை அவன் திறமையாகச் செய்ததால் டயர் கம்பெனி அவனை பெங்களூரில் இருக்கும் மார்க்கெட்டிங் ஆபீஸில் சேல்ஸ் மானேஜராகப் பதவி உயர்வு அளித்திருப்பதைச் சற்று பெருமையுடனும், சற்று கவலையுடனும் சொன்னான்.

மாற்றல் என்பது சாதாரண விஷயமா என்ன? அதுவும் ஊர் விட்டு ஊர், வேறு பாஷை, வேறு சீதோஷ்ணம் என்று ஏகப்பட்ட கவலை.

பாட்டியும், தாத்தாவும் குஷியாகி விட்டார்கள். 'கொஞ்ச நாளைக்கு பெங்களூரில் ஹனிமூன், என்று தாத்தா பாட்டியையும், 'என் சக்களத்தியுடன் போக வேண்டியதுதானே' என்று பாட்டி தாத்தாவையும் சீண்டிக் கொண்டார்கள்.

அம்மா கூட 'கவலைப்படாதே தேவு, சமாளிக்கலாம்' என்றாள்.

நந்தினி, அம்மா அப்பாவிடம் சொல்லிக் கொண்டாள். புது ஊர். பழகாத மக்கள். கேள்வி அற்ற கண்கள். பழையன கழிக்க ஒரு சந்தர்ப்பம்.

புவனாதான் கேள்விக்குறியாக நந்தினியைப் பார்த்தாள்.

''ஏய் புவனா?'' என்றாள் நந்தினி கிண்டலாக.

''என்ன அண்ணி. பெங்களூருக்குப் போய்ட்டா அப்புறம்?''

''அப்புறமுமில்ல. இப்புறமுமில்ல. நாங்க பெங்களூர் போற அன்னிக்குத்தான் நீ உன் ஷ்யாம்சுந்தரோட போய்ச் சேந்துக்கப் போறே.''

''நெஜமாவா அண்ணி?'' என்று கேட்டாள் புவனா.

சமையலறையில் நடந்து கொண்டிருந்தது பேச்சு வார்த்தை. புவனா கிரைண்டரை ஓட விட்டு மாவைக் கையால் தள்ளிக் கொண்டே கேள்வி கேட்டுக் கொண்டிருந்தாள். நந்தினி, தேவராஜுக்கென்று காப்பியை ஆற்றிக் கொண்டே தன் சதித் திட்டத்தை விளக்கிக் கொண்டிருந்தாள்.

காப்பி ஆறி விட்டதாவென்று தெரிந்து கொள்ள ஒரு சொட்டை வாயில் விட நிமிர்ந்த போதுதான், சமையலறை வாசலில் நின்று, அவர்கள் இருவரையும் இறுக்கமான முகத்துடன் பார்த்துக் கொண்டிருந்த தேவராஜ் தெரிந்தான்.

நந்தினி காப்பி தம்ளரைத் தவற விட்டாள்.

(தொடரும்)

# சமன்பாடு

**அபிமானி**

சரஸ்வதியைக் கண்டதும் நந்தகோபாலுக்கு முகத்தில் அறைந்தது போல இருந்தது. 'இவளைக் கல்யாணத்துக்கு அல்லவா போகச் சொல்லியிருந்தேன்? ஏன் போகவில்லை?' மனதுக்குள் போராட்டம் நிகழ்ந்தது. என்ன நெஞ்சழுத்தம் இருந்தால் நேற்றிரவு மறுகி மறுகிச் சொல்லியிருந்த போதும் அதைக் காதிலே போட்டுக் கொள்ளாமல் நிராகரித்து விட்டிருக்கிறாள் இவள் என்று ஆத்திரம் கிளர்ந்து நின்றது.

''ஏன் கல்யாணத்துக்குப் போகலை? எவ்வளவு அக்கறையாய்ச் சொல்லியிருந்தேன்?''

''கல்யாணத்துக்கு நா போயிட்டா உங்களை யாரு பாப்பாங்க?''

''ஏன்... நீயும் பெரிய பையனும் போயிருக்க வேண்டியதுதானே... என்னையப் பாத்துக்கிட தேவியும் சிரஞ்சீவியும் இருக்காங்கல்ல? நேத்து ராத்திரி அப்படித்தானே உங்கிட்ட சொல்லி விட்டேன். திரும்பத் திரும்பச் சொல்லியும் என் வார்த்தையைக் காதுல போட்டுக்கலையே நீ. உனக்கு என்னையப் பாத்துக்கிடணும்கிற அக்கறையில்ல காரணம்.. கல்யாணத்துக்குப் போகக் கூடாதுன்னே தீர்மானம் பண்ணிட்டே.''

''அப்படின்னு நீங்க நெனச்சா நா என்ன பண்ண முடியும்?'' அக்கறையில்லாத பதில்.

தொனியை அடக்கி வாசிக்கப் பிரயத்தனப்பட்டார். ''ஆமா.. என்னால என்ன பண்ண முடியும்? முடியாதுதான். என்னால முடியுமின்னா நா ஏன் உங்கிட்ட கெஞ்சப் போறேன். போச்சு.. எல்லாமே கெட்டுப் போச்சு.. எனக்கு மட்டும் இப்படியொரு நிலைமை ஏற்படாமயிருந்தா உன்னைய எதிர்பார்த்திருப்பேனா? இவ்வளவுக்கும் உன் கூடப் பொறந்த அக்கா மகளோட கல்யாணம். இப்போ கல்யாணத்துக்கும் போக முடியாம உங்க அண்ணனையும் பாத்துப் பேச முடியாம - ச்சே.. ஒரு மனுசன் கெடப்பில விழுந்தா ஒண்ணுமே நடக்காம போயிருதே.''

வேதனையில் கரைந்து போனார் நந்தகோபால். காரியம் கைகூடாத வேதனை. கல்யாணத்திற்குப் போனது போலவும் ஆயிற்று. அங்கே வரும் சரஸ்வதியின் அண்ணனிடம் தம் பெண்ணுக்கு மாப்பிள்ளை கேட்டதும் போலாயிற்று என்று கணக்குப் போட்டிருந்தவரின் ஆகாத காலம், எல்லாமே பிழையாய் முடிந்து போயிற்று. அவள் அண்ணன் மகன் எம்.பி.பி.எஸ். ஐந்தாவது வருஷம் பண்ணிக் கொண்டிருந்தான். எப்படியாவது தம் பெண் தேவிக்கு அவனை வளைத்துப் போட்டு விட வேண்டுமென்று நந்தகோபாலின் தீர்மானம். ஒரே செல்ல மகள். மற்றதுகள் மூன்றும் பிள்ளைகளாய் இருந்ததால் அவர்களைப் பற்றிப் பெரிதும் கவலைப் பட்டுக் கொள்ளவில்லை அவர். இருந்த சொத்து சுகங்களை எல்லாம் நான்கு பேரின் படிப்புக்கும் துணிக்குமே கரைத்து விட்டு, இன்று எவனாவது குறைந்த தொகையில் தம் மகளைக் கொத்திக் கொண்டு போக மாட்டானா என்று ஏங்கும் தரித்திரம். குடும்பத்தோடு கல்யாணத்திற்குப் போய் எப்படியாவது அத்தானைச் சரிக் கட்டி விடலாம் என்று ஆகாயக் கோட்டை கட்டியிருந்தார். திடுதிப்பென்று போன வாரம் ஏற்பட்ட ஸ்கூட்டர் விபத்தில் வலது கால் முறிந்து இன்று ஆஸ்பத்திரியில் முடக்கம்.

காலுக்கு மாவுக்கட்டுப் போட்டிருந்தனர். சுகப்பட இன்னும் மூன்று மாதங்களை விழுங்கும் என்றிருந்தனர். எல்லோரையும் சுமைதாங்கியாய்த் தாங்கிக் கொண்டிருந்தவர், இன்று எல்லோர்க்கும் சுமையாய் மாறிப் போனதில் மனம் குறுகிக் கொண்டது அவருக்கு. இல்லையென்றால் இத்தனை இலகுவாய் தம் கோரிக்கையை நிராகரித்திருப்பாளா இவள் என்று சரஸ்வதி மேல் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

அவள் நிராகரிப்பின் ஆதர்சம் புரிந்திருக்கவில்லை அவருக்கு -

''ஏன் போக மாட்டேன்கிற காரணத்தைத் தெரிஞ்சிக்கலாமா நான்?''

''என்னால எங்கண்ணாகிட்ட அது பற்றிப் பேச முடியாது. எம்.பி.பி.எஸ். படிக்கிற பையனுக்கு லட்சக்கணக்குல தொகை கேட்கலாம்... நமக்கு அதுக்குள்ள

தருநியில்லாத போது அவரிடம் கேட்டு அவமானப்பட நான் தயாராயில்ல...''

''வேற யாரைக் கரையேற்றி விடணும்னு கேட்கச் சொல்றேன்.. நம்ம மகளுக்காகத்தானே?''

''கூடப் பொறந்த தங்கச்சி மகள் என்கிறதுக்காக தொகையைக் குறைச்சிக் கிடுவாருன்னு எனக்குத் தோணல.''

''நீ ஏன் வாய் புளிச்சதோ காய் புளிச்சதோங்கிற விவஸ்தையில்லாமப் பேசுற? கேட்டுப் பார்த்தாத்தானே அவரோட எண்ணம் புரியும்?''

சற்று நேரம் அமைதியில் ஆழ்ந்திருந்தாள் சரஸ்வதி. சட்டென்று நந்தகோபாலின் பக்கம் திரும்பி, ''ஏன்... என்னைக் கல்யாணம் முடிக்கும் போது ஐயாயிரம் ரூபாய் கொறஞ்சதுக்குத்தானே நீங்க தாலி கட்ட மாட்டேன்னு தலைகீழா நின்னீங்க. சாதாரண சூபர்வைசர் உத்தியோகத்துக்கே லொட்டு லொசுக்குனு என்னென்னலாம் கேட்டீங்க. அது மாதிரித்தானே எங்க அண்ணாவும் இருப்பாரு... அதுவும் எம்.பி.பி.எஸ். படிக்கிற பையனுக்கு....'' என்று வெள்ளோட்டமாய் வார்த்தைகளைப் பாய்ச்சி விட்டாள்.

குற்றவாளியாய்ப் பேதலித்துப் போனார் நந்தகோபால். குறுகுறுப்பாயிருந்தது மனதுக்குள். சரஸ்வதியின் குற்றக் கணைகள் ஒவ்வொன்றும் கூர்மையாயிருந்ததால் அவர் இருதயத்திற்குள் பலமாய்க் காயம் விழுந்தது. பழைய அவலங்களைச் சாட்சிக்கு இழுத்து விசாரணையிட முயற்சி செய்கிறாள். அவளுக்கே நிகழ்ந்து போன அவலங்கள். எத்தனை வருஷங்கள் ஆனாலும் இன்னும் அழியாத தழும்புகளாய் அவளுக்குள் நின்று ஆர்த்தெழும் தீச்சுடர்கள்.

புரிந்து போயிற்று அவருக்கு. எதனால் அவள் உடன்பட மறுக்கிறாள் என்பது புரிந்ததால் மேலும் அவளுடன் விவாதிக்க மனமில்லாமல் போயிற்று.

''சரி சரி... எனக்கு ஆக்ஸிடன்ட் ஆயிருச்சின்னு லட்டர் போட்டிருக்கோம்ல.. நாளைக்கு எப்படியும் உங்க அண்ணன் வரலாம். நானே அவர்கிட்ட பேசிக்கிடுறேன்.''

மறுநாள் சாயந்தரம் அவள் அண்ணா வந்திருந்தார் ஆஸ்பத்திரிக்கு. அவரைப் போலவே மற்றொரு தாட்டியமான ஆளையும் கூட்டிக் கொண்டு வந்திருந்தார். சொந்தக்காரர்தானாம். கல்யாணத்திற்கு



### நம்பியார் நம்பியார்தான்

அசத்தி விடுகிறார் நம்பியார். கழி சுழற்றிப் போராடுவதென்ன... கால்களை முன்னும் பின்னும் தாளத்துக்கேற்ப வைத்துப் பாடி ஆடுவதென்ன... இசைக் குழுவின் மூத்த தலைமுறையாய் நிதானித்துப் பேசி ஆலோசனைகள் வழங்கிப் பக்கத் துணையாய் நிற்பதென்ன... ஒவ்வோர் அசைவிலும் அனுபவம் பளிச்சிடுகிறது.

### அடக்கமான மோகினி

பணம் கொட்டிக் கிடந்தாலும் பதவிசான பாங்கு. அழகாகச் சிரிப்பதோடு அடக்கமான பேச்சு. கார்த்திக்கின் பாடலைக் கேட்டு ரசிக்கும் போதும் சரி, அவரால் கவரப்பட்டுத் தம் கழுத்துச் சங்கிலியை அவருக்கு அணிவிக்கும் போதும் சரி, இசை ரசனையின் தொடர்ச்சியாக அவரிடம் மனத்தை இழக்கும் போதும் சரி, சம்பிரதாய சினிமா வில்லனான முறைப் பையனின் முரட்டு நடவடிக்கைகளால் காதலனைப் பிரிந்து சோகிக்கும் போதும் சரி, அந்த அடக்கம் தொடர்ந்து ஒரு யதார்த்தப் போர்வையைப் போர்த்தி விடுகிறது, மோகினிக்கு.

### சரளமான கார்த்திக்

டேப்பைத் தட்டிப் பாடுவதும், கனவுக் காட்சிகளில் ரகவாரியான உடையணிந்து காதலியுடன் ஆடுவதும், வில்லனின் கையாட்கள் எத்தனை பேர் வந்தாலும் எதிர்த்துச் சமாளித்துச் சண்டையிடுவதுமான நிகழ்ச்சிகளைப் பலமுறை செய்து பழக்கப்பட்டுப் போய்விட்ட காரணத்தால் கார்த்திக்கிடம் தென்படுவது எளிதாக இடம்பெறும் சரளம். அவர் மீது அதிக பளு சுமத்தப்படாதது கதாசிரியர் குற்றம்.

### ரசனைக் குறைவான நகைச்சுவை

செந்தில் மைனஸ் கவுண்டமணி. எனவே அடிவாங்குவதற்குப் பதிலாக அடி கொடுக்க வாய்ப்பு. கொடுக்கிறார். வழக்கம் போலக் கதையுடன் இணையாத இடைச்செருகலான நகைச்சுவை. ஆரம்பப் பள்ளிரகம். அலுப்புத் தட்டுகிறது. இத்தனை வயதுக்கு மேல் செந்தில் துப்பாக்கியைக் கண்டு நடுங்கிப் பயந்து போய்ச் சிறுநீர் கழிப்பது தேவையற்ற காட்சி என்றால், அதைப் படம் பிடித்துக் காட்டியிருக்கும் விதம் படு மட்டமான ரசனை.

### இனிமையான இசை

இளையராஜா அருவிப் பிரவாகமாக வழங்கியிருப்பது இனிமை. அதற்கு அழகு சேர்ப்பவை இரண்டொரு கர்நாடக ராகங்கள். பேஷ் பேஷ். பாடலாசிரியர்களுக்கும் சேர்த்துத்தான்.

### நிர்ணயிக்கப்பட்டுள்ள நிகழ்ச்சிகள்

எந்தப் படமாக இருந்தாலும் இன்னின்ன நிகழ்ச்சிகள் இந்த இந்த வரிசையில்

வந்திருந்த கையோடு ஆஸ்பத்திரிக்கும் வந்திருக்கிறார் என்பது புரிந்தது நந்தகோபாலுக்கு.

வழக்கமான குசல விசாரிப்புகள். விபத்தின் நிகழ்ச்சி நிரல். தற்போதைய நிலவரம், தேவைப்படும் கால அவகாசம்... எல்லாம் பிரஸ்தாபிக்கப்பட்டன.

தம் வீட்டிற்குப் போய் விட்டு அதற்குப் பிறகே அவர்கள் ஆஸ்பத்திரிக்கு வந்திருப்பது புரிந்ததும் நந்தகோபாலுக்கு 'நறுக்' கென்று மூளைக்குள் முள் இறங்கியது போல வலித்தது. ஏசுபிசகாய் சரஸ்வதி எதுவும் பற்றவைத்திருக்கக் கூடாதே என்ற நினைப்பு நெஞ்சில் நிமிண்டியது. அப்படியெல்லாம் இருக்காது என்பதை நினைத்துப் பார்க்க, சற்று ஆறுதலாயிருந்தது.

''மாப்பிள்ளை எப்படியிருக்கார்?'' தூண்டிலை மெதுவாய்க் குளத்திற்குள் இறக்கினார் நந்தகோபால். நீர் மட்டத்திலே மிதவை தத்தளித்தது. மீனைத் தேடி தூண்டில் ஆழத்தில் இறங்கியது. மீன் வருமா, அல்லது இரை போகுமா? தவிப்பாயிருந்தது நந்தகோபாலுக்கு.

''இருக்கான் இருக்கான்.. இது கடைசி வருசமில்ல... படிப்பிலேயே கண்ணாயிருக்கான்.''

மிதவை மெதுவாக அசைந்து கொடுத்தது. மீன் வந்து கவ்வப் பார்க்கிறதா? காற்று அசைக்கிறதா? குழப்பமாயிருந்தது நந்தகோபாலுக்கு.

''வருசம் போகப் போக வயசும் போகுதில்ல... படிப்பு முடிஞ்சதும் சட்டுப் புட்டுன்னு ஒரு கால்கட்டுப் போட்டுற வேண்டியதுதானே?''

நூலைச் சுண்டி இழுத்துத் தூண்டிலை சற்று நகர்த்தி வீசினார் நந்தகோபால். மீண்டும் மிதவையின் தத்தளிப்பு. தூண்டிலின் ஆழம் பார்ப்பு.

''படிச்சு முடிச்சதும் த னி யா ஒரு கிளினிக் வச்சு நடத்துற அளவுக்கு வாழ்க்கையில் ஒரு 'செட் அப்'புக்கு வந்தப் புறம்தான் கல்யாணங்கிறான். கடன் நெறையக் கெடக்குதில்ல.. அதையெல்லாம் அடைக்க வேணுமில்ல?''




அவசியம் இருந்தாக வேண்டும் என ஒரு ஃபார்முலா நிர்ணயமாகி விட்ட பிறகு, அவற்றைக் கோத்துத் தருவதற்குத் தனி யாகக் கதாசிரியர் என ஒருவர் எதற்கோ?

- சி. ஆர். கே.

---

மிதவை அசையவில்லை. காற்றும் இல்லை, மீனும் கவ்வவில்லை. இறுக்க மான சூழல். நந்தகோபாலின் மனசு பார மாய்க் கனத்தது.

''அப்படியென்ன கடன் பெரிசா இருக் கிறது?''

''பணமில்லாம இந்தக் காலத்துல என்ன பண்ண முடியுது? அட்மிஷனுக்கே அரை லட்சம் கேக்கறானுவளே. அவன் படிப்புக்கின்னே இதுவரைக்கும் ரெண்டு லட்சத்துக்கும் மேலேதான் ஆகியிருக்கு... எல்லாம் கடன் வாங்கித்தான் காரியம் கழியுது. பிசினஸ்ல என்ன, முன்னேற்ற மாவா இருக்கிறது?''

இப்போதும் மிதவை அசையவில்லை. அசையும் என்கிற நம்பிக்கையும் அவருக் கில்லை. எதற்காகக் குறிவைத்துத் தூண் டிலை வீசியிருந்தாரோ அந்த மீனின் சுவைக்குத் தகுந்த மாதிரி தமது தூண்டில் முள்ளில் வைத்த இரை பக்குவப்பட்டு வராது என்பது ஊர்ஜிதமாயிற்று. அத் தானின் எதிர்பார்ப்பு அதிகமாய்த் தெரி கிறது. நந்தகோபாலின் தகுதிக்கும் மீறிய எதிர்பார்ப்பு. 'பையனுக்கு வரதட்சணை யாய் ரெண்டு லட்சம் கொடு' என்று கேட்பதற்குப் பதிலாகத்தான் 'அவன் படிப்புக் கடன் ரெண்டு லட்சத்தைத் தாண்டு கிறது. அதைச் சரிக்கட்ட வேண்டும்' என்கிறார் அத்தான் என்பது புரிந்தது. பேசத் தெரிந்த மனிதர்! நல்லவேளையாக, சரஸ் வதியைப் போல முகத்தில் அடித்த மாதிரி பழையதைக் கிண்டவில்லை.

இரண்டு லட்சம்! நினைத்துப் பார்க் கவே மலைப்பாய்த் தோன்றியது நந்த கோபாலுக்கு. அசையும் சொத்துக்கள், அசையாச் சொத்துக்கள் எல்லாவற்றையும் பொறுக்கி எடுத்துக் கூட்டிப் பார்த்தாலும் ஒரு லட்சத்துக்குத் தேறுமா என்பதே அவருக்குள் கேள்விக்குறியாய் எழுந்து நின்றது. ஏணி வைத்தாலும் எட்டாத உறவு. 'ச்சீ, இந்தப் பழம் புளிக்கும்' என்கிற கதையாய்ப் போனதை நினைத்து மனசு குமுறியது. ஒற்றைக்கொரு பெண். சொந்த பந்தத்தில் கைப்பிடித்துக் கொடுத்தாலாவது கண்ணீர் விடாமல் காலம் தள்ளுமே என்ற



''எனக்குப் பாதுகாப்பு வேணும் சார்!''

''எதுக்கு...?''

''நான்தான் ஜோக்ஸ் எழுதற ஜோசப்னு எங்க ஊர்ல பல பேருக்கும் தெரிந்து போச்சு சார்..!''

- சீர்காழி வி. ரேவதி



ஏட்டு : ரவுடி ராமசாமி இனிமே மாமூல் தரமாட்டானாம்!

இன்ஸ்பெக்டர் : ஏனாம்?

ஏட்டு : அவனே புதுசா போலீஸ் ஸ்டேஷன் ஆரம்பிச்சிட்டானாம்!

- சோமசேகர்

நைப்பாசை...

தூண்டிலை வேகமாய் வெளியே இழுத்துக் கரையில் வீசினார் நந்தகோபால். மிதவை வேறு, தூண்டில் வேறு திசையாகப் பிரிந்து விழுந்தன.

''உடம்பை நல்லாக் கவனிச்சுக்குங்க. ஸெப்டிக் ஆகாம பாத்துக்கிடணும்...''

அத்தான் ஆறுதல் சொன்னார். நேரம் இருட்டுக்குள் ஒளிந்து கொள்ளத் துவங்கியிருந்ததால் அவர் விடைபெற நினைக்கிறார் என்பது புரிந்தது நந்தகோபாலுக்கு.

எல்லாவற்றுக்கும் மொத்தமாய்த் தலையாட்டிக் கொண்டார்.

''கல்யாணக் காரியம் முடிஞ்சதும் எல்லோரும் உங்களைப் பார்க்க வரணும்னு சொன்னாங்க!'' அத்தான் சகஜமான புன்னகையோடு சொன்னார்.

நந்தகோபாலுக்குச் சகஜப்பட முடியாமல் திணறலாயிருந்தது. அமைக் காயத்தின் வலி அவ்வளவு சீக்கிரத்தில் அமிழ்ந்து விடுமா என்ன?

''அதுக்கென்ன... எனக்குத்தான் இப்போ பரவாயில்லியே!'' அசடு வழிந்து கொண்டார் நந்தகோபால்.

இருவரும் விடைபெற்றுக் கொண்டு வெளியே போனதும் மழை பெய்து ஓய்ந்த அமைதி நிலவிற்று அங்கே. மீண்டும் விச்ராந்தியாய்க் கட்டிலில் சரிந்து கொண்டார்.

மூன்று நாட்கள் கழிந்திருந்த ஒரு மதியப் பொழுது. சூட்டுத் தகிப்பைக் கூட அலட்சியப்படுத்திக் கொண்டு அன்று வழக்கத்திற்கு மாறாய்க் கொஞ்சம் சீக்கிரமாகவே வந்த சரஸ்வதியைப் பார்த்து நந்தகோபாலுக்கு ஆச்சரியமாக இருந்தது. வழக்கம் போல கையில் டிஃபன் கேரியரும்... வலது கையில் - என்ன அது? இன்லாண்ட் கடிதமாகவல்லவா தெரிகிறது...

''என்ன... என்ன விசயம்? இவ்வளவு வேகமாய் ஓடி வர்ற?''

அவசர அவசரமாய்க் கேரியரைக் கட்டிலுக்கு அடியில் வைத்து விட்டு அதே வேகத்தில் லட்டரை நந்தகோபாலிடம் தந்தாள். படபடப்புடன் நின்றிருந்தாலும் அவள் முகத்தில் புது மலராய்ச் சந்தோஷம் புன்னகை பூத்துக் கொண்டு நின்றிருந்ததை அவரால் கண்டுகொள்ள முடிந்தது.

''யாரு போட்டிருக்காங்க?''

''அண்ணன் போட்டிருக்கார்.''

''என்ன எழுதியிருக்காரோ?''

''படிச்சித்தான் பாருங்களேன்.''

லட்டரைப் பிரித்து அதன் எழுத்துக்களில் கண்களை மேய விட்டார்....

பிரியமுள்ள அத்தானுக்கு. கோடி நமஸ்காரங்கள். கால் இப்போது எப்படியிருக்கிறது? நன்றாகக் கவனித்துக் கொள்ளவும்.

மேலும், தங்களைப் பார்க்க ஆஸ்பத்திரிக்கு வந்த நம் சொந்தக்காரருக்கு, அவர் மகனுக்கு மணம் முடித்து வைக்க நம் தேவியைப் பிடித்து விட்டது. அவளைப் பெண் பார்க்க முறையோடு வரப் போவதாகச் சொல்கிறார். பையனுக்கு தெர்மலில் மெக்கானிக் உத்தியோகம். குடும்பம் நடத்தப் போதுமான சம்பளம். வரதட்சணையும் அதிகமாகக் கேட்க மாட்டார். தங்களின் விருப்பத்தை எழுதவும்.

அன்புடன்,
அத்தான்.

கடிதத்தை மூடியதும் அவர் மனம் திறந்து கொண்டது. தமது தகுதிக்கு ஏற்றாற்போலத்தான் தம் அத்தான் மாப்பிள்ளை பார்த்திருக்கிறார் என்பதை நினைக்க, மகிழ்ச்சி தலைநீட்டிப் பார்த்தது. அதுவும் வரதட்சணை அதிகமாகக் கேட்காத மாப்பிள்ளை. அதாவது, அத்தான் தம் பிள்ளைக்கு அதிகமாக எதிர்பார்ப்பதும், அவருக்குத் தாம் சமமில்லை என்பதையும் சூசகமாய்ச் சொல்கிறார் என்றே நினைக்கத் தோன்றியது நந்தகோபாலுக்கு. அவர் சொல்வதும் சரிதானே. விரலுக்குத் தகுந்த வீக்கம்தானே. சரஸ்வதியைப் பார்த்துப் புன்முறுவலை உதிர்த்தார் நந்தகோபால்.

# விடுதலைப் போராட்ட வீரரின் ஏஜென்ஸி போராட்டம்!

தியாகி என்கிற தகுதி அடிப்படையில் எல். பி. ஜி. ஏஜென்ஸிக்காக விண்ணப்பித்த எல். எஸ். கிருஷ்ண மூர்த்தி தமது சொந்த ஊரான கோவைக்கும் டெல்லிக்குமிடையே அலைந்த அலைச்சலைக் கேட்டால் பகீரதன் பாடே தேவலாம் என்று தோன்றிப் போகும்.

இந்திரா காந்தி பிரதமராக இருந்த போது சமையல் எரிவாயு ஏஜென்ஸி அளிப்பதற்குச் சில விதிமுறைகள் வகுக்கப்பட்டன. வேலையில்லாப் பட்டதாரிகள், ஓய்வு பெற்ற ராணுவ வீரர்கள், சுதந்திரப் போராட்ட தியாகிகள் போன்றோருக்கு இந்த LPG ஏஜென்ஸி பெறுவதில் முன்னுரிமை தரப்பட வேண்டும் என முடிவாயிற்று. ஏஜென்ஸியைப் பெறுவோர் ரூ 50,000க்குக் குறைவான வருட வருமானம் உடையவராய் இருக்க வேண்டும்; வேறு இடத்தில் எல். பி. ஜி. ஏஜென்ஸி வைத்திருக்கக் கூடாது; விண்ணப்பிக்கும் வட்டாரத்தில் குடியிருக்க வேண்டும் என்றும் முடிவாயிற்று.

''ராஜீவ் காந்தி காலம் வரை ஓரளவுக்குக் கடைப்பிடிக்கப்பட்டு வந்த இந்தக் கட்டுப்பாடுகள் இப்போது அடியோடு போய் விட்டன'' என்கிறார் 1983 முதல் எல்.பி.ஜி. ஏஜென்ஸிக்குப் பலமுறை விண்ணப்பித்துச் சலித்துப் போன காங்கிரஸ் தியாகி எல். எஸ். கிருஷ்ணமூர்த்தி.

கிருஷ்ணமூர்த்தி தமது பதினான்காவது வயதிலேயே அந்நியத் துணி பகிஷ்கரிப்பில் ஈடுபட்டு சுதந்திரத்துக்காகப் போராடியவர். பின்னர் தொழிற்சங்க இயக்கத்தில் தீவிர மாக ஈடுபட்டு காங்கிரஸ் கமிட்டி தொழிலாளர் பிரிவின் தலைவராக ஆர். வி. இருந்தபோது அவருடன் நெருக்கமாகப் பழகிப் பணியாற்றியவர்.

''செய்தித்தாள் விளம்பரத்தைப் பார்த்துத்தான் 1983 இல் எல். பி. ஜி. ஏஜென்ஸிக்கு முதன் முதலாக விண்ணப்பித்தேன். நேர்முகத் தேர்வுக்குப் பின் ஏஜென்ஸி கிடைக்காமல் போயிற்று. '86 இல் மீண்டும் விண்ணப்பித்தேன். இம்முறை விண்ணப்பிக்கும் தகுதி பெறுவதற்காக என் இருப்பிடத்தையே மாற்றிக் கொண்டேன். (ஏஜென்ஸி எடுக்கும் வட்டாரத்தில் ஏஜெண்ட் வசிக்க வேண்டும் என்பது விதியல்லவா...) ஆனால் இம் முறையும் ஏமாற்றம்தான்.

''திரும்பவும் 1990இல் விண்ணப்பித்தேன். இந்த முறை ஏஜென்ஸி பெறப் பெற்றவர்கள் யார் யார் என்ற அறிவிப்புக் கூட அரசிடமிருந்து வரவில்லை.

''வெறுப்புற்ற நான் டெல்லிக்கே நேரில் சென்று விசாரிக்க முடிவு செய்து கிளம்பினேன். உடன் பணியாற்றியவர் என்கிற முறையில் ஜனாதிபதி ஆர். வி. யிடமும் நீதித் துறை அமைச்சர் குமாரமங்கலமிடமும் அத்தாட்சிக் கடிதங்கள் பெற்றேன்.

''எல்.பி.ஜி. விநியோகஸ்தர்களைத் தேர்வு செய்யும் பெட்ரோலியம் துறை அமைச்சர் சங்கரானந்தைச் சந்திக்க இருமுறை முயன்றும் முடியவில்லை. ஊர் திரும்பி, மீண்டும் கடந்த ஏப்ரல் மாதம் டெல்லி சென்று, 'சம்பந்தப்பட்ட அதிகாரிகளையாவது பார்க்கலாம்' என



☛ எல். எஸ். கிருஷ்ணமூர்த்தி

முயன்றேன். அதுவும் முடியாமல் போகவே மார்க்கெடிங் துணைச் செயலர் பீமப்பாவைச் சந்தித்து என் நெடுநாளைய முயற்சியை விளக்கினேன்.

''1990 ஆம் ஆண்டிற்குத் தேர்வு செய்யப்பட்ட விநியோக விண்ணப்பதாரர் பட்டியல் ஏற்கெனவே அந்தந்த ஊர்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளதாக பீமப்பா தெரிவிக்க, தமிழகத்தின் பட்டியல் பற்றி அறிய சென்னைக் காரியாலயத்தை அணுகினேன். அவர்களோ, தங்களுக்கு அப் பட்டியல் வரவே இல்லை என்று கூறி விட்டனர்!...''

தமது வீண் அலைச்சலினால் நொந்து போய்க் காணப்பட்ட எல். எஸ். கிருஷ்ணமூர்த்தி ''சுதந்திரம் பெறுவதற்குப் போராடியதைக் காட்டிலும் எல்.பி.ஜி. ஏஜென்ஸி பெற அதிகம் போராட வேண்டியுள்ளது'' என்கிறார்.

''அட, தியாகிகளுக்குத் தர வேண்டாமய்யா; வேலையில்லா இளைஞர்களுக்குத் தரக் கூடாதா? ஒரு ஏரியாவில் 500 சிலிண்டர் விநியோகித்தால் கூட, செலவு போக மாத வருமானம் ரூ 1500 கிடைக்குமே. ஏற்கெனவே பல லட்ச ரூபாய் வருமானமுள்ள பல பெரிய தொழிலதிபர்களுக்கே மீண்டும் இந்த எல். பி. ஜி. ஏஜென்ஸிகள் தரப்படுகின்றன'' என்று அங்கலாய்க்கிறார்.

''கையூட்டுக் கொடுத்தால் ஒருவேளை காரியம் விரைவில் நடக்கக்கூடும்; ஆனால் சத்தியம், தர்மத்தில் நம்பிக்கை வைத்துப் போராடிய ஒரு காங்கிரஸ் தியாகியாகிய என்னால் அந்த அளவுக்குக் கீழிறங்க முடியாது'' என்று கிருஷ்ணமூர்த்தி கூறியதைக் கேட்ட போது நாட்டின் நிலையை எண்ணிப் பெருமூச்சுத்தான் விட முடிந்தது!

- பிரசாந்தி

---

## போஸ்ட்மார்ட்டம்!

ஆற்றங்கரையில் ஒரு பிணம் ஒதுங்கியுள்ளது. மனிதன் நீரில் மூழ்கி இறந்தானா? அல்லது இறந்தபின் அவன் சடலம் ஆற்றில் எறியப்பட்டதா? அமெரிக்காவில் போஸ்ட்மார்ட்டம் செய்து இருதயத்தைச் சோதிப்பார்கள். இருதயத்தின் இடது பாகத்தில் உள்ள இரத்தத்தில் தண்ணீர் கலந்திருந்தால் ஆசாமி நீரில் மூழ்கி இறந்திருக்கிறான் என்று முடிவு செய்வார்கள். தண்ணீர் நுரையீரல் வழியாக வந்து, இரத்தத்தில் சேரும். இரத்தத்தில் குளோரைட் உப்பு இயற்கைக்குக் குறைவாக இருந்தால், நன்னீரில் மூழ்கியிருக்கிறான் என்றும் குளோரைட் அதிகமாக இருந்தால் உப்பு நீரில் மூழ்கியிருக்கிறான் என்றும் தெரிந்து கொள்வார்கள். இடது இருதயத்தில் தண்ணீர் இல்லாவிட்டால், செத்தபின், ஆற்றில் போடப்பட்டிருக்க வேண்டும். செத்த பின்னர் இருதயத்தினுள் தண்ணீர் புகவே முடியாது.

ஆதாரம் : நல்வழி - நலவியல் ஏடு, மே '67

தகவல் : ப. கந்தசாமி

---

''இந்தக் கல்யாண மண்டபத்தைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு வருத்தமா இருக்கும்!''

''ஏன்... இங்கே உங்க புதுச் செருப்பு ஏதாவது தொலைஞ்சு போச்சா?''

''ம்ஹூம். இங்கேதான் என் கல்யாணம் நடந்துச்சு!''

- ஞா.ச. ஞானமுத்து




''நாலரை மணிக்கெல்லாம் ஆபீஸ் முடிஞ்சிடும்... தினம் இவ்வளவு லேட்டா வீட்டுக்குப் போறீங்களே, உங்க மனைவி ஒண்ணும் சொல்ல மாட்டாங்களா...?''

''எனக்கு இன்னும் கல்யாணம் ஆகலைங்க...!''

''அப்படியா! பிறகு ஏன் தினம் லேட்டாப் போறீங்க...?''

- சங்கை எஸ். மனோகரன்





தெய்வீக துளசியை
நாம் வணங்கும்
பொழுது அது நம்மை
ஆசிர்வதிக்கின்றது

எப்படி?

மரம், செடிகளுக்கும், உயிர்த்தத்துவம் உண்டு என்று ஜகதீச சந்திர போஸ் என்னும் உலகப் பிரசித்தி பெற்ற இந்திய விஞ்ஞானி பத்தோன்பதாம் நூற்றாண்டிலேயே கண்டு பிடித்துள்ளார்.

தாவரங்களுக்கும், பசி இருக்கின்றது தாகம் இருக்கின்றது பாராட்டி பேசினால் மகிழ்ச்சியடைகிறது.

திட்டினால் விசனமடைகிறது என்பதை கண்டுப் பிடித்தார்.

-தர்மச்சக்கரம்.

செடிகளில் தெய்வீக செடிகளை வளர்ப்பதை போலவே நல்லோர்களுக்கும் கிராண்ட் ஸ்வீட் வாங்கி கொடுங்கள்.

கல்யாண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன் குழல், தேன் குழல், அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2-வது மெயின் ரோடு, காந்தி நகர்,
அடையாறு, சென்னை-600 020. போன்: 412557

# சிவகாமியின் சபதம்

## ஆறாம் அத்தியாயம்
## ஏகாம்பரர் சந்நிதி

பாரதகண்டம் எங்கும் புகழ் பரவியிருந்த காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோவிலில் உச்சிக்கால பூஜை நடந்து கொண்டிருந்தது. அதற்கு அறிகுறியான ஆலாசிய மணியின் ஓங்கார நாதமும் பேரிகை முழக்கமும் கேட்டுக் கொண்டிருந்தன.

கோயிலுக்கு வெளியே கோபுர வாசலிலும் சந்நிதி வீதியிலும் கணக்கற்ற ஜனங்கள் நெருங்கி மொய்த்துக் கொண்டிருந்தார்கள். பல்லவ சக்கரவர்த்தி பரிவார சகிதமாக ஆலயத்துக்கு வந்திருந்ததுதான் அவ்விதம் ஜனக்கூட்டம் திரண்டிருந்ததற்குக் காரணமாகும்.

ஆலயத்துக்குள்ளே ஏகாம்பரநாதரின் சந்நிதி என்றுமில்லாத சோபையுடன் அன்று விளங்கிற்று.

வெள்ளிக் குத்து விளக்குகளில் ஏற்றியிருந்த பல தீபங்களின் ஒளியில், சந்நிதியில் நின்ற இராஜ வம்சத்தினரின் மணிமகுடங்களும் ஆபரணங்களும் ஜாஜ்வல்யமாய்ச் சுடர் விட்டுப் பிரகாசித்தன.

சந்நிதியில் ஒரு பக்கத்தில் இராஜ குலத்து ஆடவர்களும், மற்றொரு பக்கத்தில் அந்தப்புரத்து மாதர்களும் நின்றார்கள்.

அவர்கள் யார் யார் என்பதைச் சற்றுக் கவனிப்போம்.

எல்லாருக்கும் முதன்மையாகப் பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி மாமல்ல நரசிம்மர், அறுநூறு வருஷமாக அவருடைய மூதாதையர் அணிந்த கிரீடத்தைத் தம் சிரசில் அணிந்து, கம்பீரமாக நின்றார். கரங்களைக் கூப்பி இறைவனை இறைஞ்சி வழிபட்டுக் கொண்டிருந்த நிலையிலும் அவருடைய தோற்றத்திலே பரம்பரையான இராஜகுலத்தின் பெருமிதம் காணப்பட்டது.

அவருக்கு இருபுறத்திலும் இலங்கை இளவரசர் மானவன்மரும் சேனாதிபதி பரஞ்சோதியும் நின்றார்கள். பரஞ்சோதிக்கு அடுத்தாற்போல், பல்லவ வம்சத்தின் மற்றொரு பிரிவைச் சேர்ந்தவனும், வேங்கி நாட்டை மீண்டும் புலிகேசிக்குப் பறி கொடுத்து விட்டுக் காஞ்சியில் வந்து அடைக்கலம் புகுந்தவனுமான அச்சுத வர்மன் அடக்க ஒடுக்கத்துடன் நின்றான்.

அவனுக்குப் பின்னால் கொடும் பாளூர்ச் சோழ வம்சத்தைச் சேர்ந்த செம்பியன் வளவனும், அச்சுத விக்கிராந்தனுடைய சந்ததியில் தோன்றிய உண்மையான வஜ்ர பாஹுவும் நின்றார்கள்.

இன்னும் பின்னால், பல்லவ சாம்ராஜ்யத்துப் பிரதம மந்திரி சாரங்கதேவ பட்டர், முதல் அமைச்சர் ரணதீர பல்லவ ராயர், மற்ற மந்திரி மண்டலத்தார், கோட்டத் தலைவர்கள் முதலியோர் ஒருவரையொருவர் நெருங்கியடித்துக் கொண்டு நின்றார்கள்.

நல்லது! எதிர்ப்பக்கத்தில் நிற்கும் பெண்மணிகளை இனி பார்க்கலாம். முதற் பார்வைக்கு, அந்தப் பெண்மணிகள் எல்லாரும் சௌந்தர்ய தேவதையின் பல வித வடிவங்களாகவே தோன்றுகிறார்கள்.

சிறிது நிதானித்துப் பார்த்துத்தான், அவர்களில் யார் இன்னவர் என்று தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

முதலில் காலஞ் சென்ற மகேந்திர சக்கரவர்த்தியின் பட்டமகிஷி புவனமகாதேவி சாந்தமும் பக்தியுமே உருக்கொண்டாற் போன்ற தெய்வீகத் தோற்றத்துடன் நின்றார்.

அவருக்கு அருகில் மாமல்ல சக்கரவர்த்தியின் தர்மபத்தினியும் பாண்டிய ராஜன் திருக்குமாரியுமான வானமாதேவி நின்றாள். சக்கரவர்த்தினியோடு இணைந்து நின்று இளவரசி குந்தவிதேவி நன் கரிய விழிகளினால் குறுகுறுவென்று அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வானமாதேவிக்கு அருகில் பக்தியும் தூய்மையும் சௌந்தரியமுமே உருக் கொண்டவள் போல் நின்ற மற்றொரு பெண் தெய்வத்தைச் சிறிது கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். சுமார் பதினெட்டுப் பிராயம் உடைய இந்த இளமங்கைதான் சோழ வம்சத்தின் கொடும்பாளூர்க் கிளையைச் சேர்ந்தவனான செம்பியன் வளவனுடைய திருப்புதல்வியான மங்கையர்க்கரசி. பிற்காலத்தில் பாண்டியன் நெடுமாறனின் தேவியாகி, ஞானசம்பந்தரை மதுரைக்குத் தருவித்து, சிவனடியார் கூட்டத்தில் என்றும் அழியாத புகழ்பெறப் போகிறவர். இன்னும் பல அந்தப்புரமாதரும் அங்கே இருந்தார்கள். அவர்களையெல்லாம் பற்றி நாம் தனித்தனியாகத் தெரிந்து கொள்வது அவசியமில்லையாதலால், மேலே செல்வோம்.

டன் டாண், டன் டாண் என்று ஆலாசிய மணி அவசர அவசரமாக அடித்தது. தம் தாம், தம் தாம் என்று பேரிகை பரபரப்புடன் முழங்கிற்று. சங்கங்கள், எக்காளங்கள், மேளங்கள் தாளங்கள், - எல்லாமாகச் சேர்ந்து சப்தித்து ஆலயத்தின் விசாலமான மண்டபங்களில் நாலாபுறமும் கிளம்பிய எதிரொலியுடன் சேர்ந்து மோதிய போது, நாதக் கடல் பொங்கி வந்து அந்தக் கோயிலையே மூழ்க அடித்தது போன்ற உணர்ச்சி அனைவருக்கும் உண்டாயிற்று.

ஏகாம்பரேசுவரருக்கு தீபாராதனை நடந்ததை முன்னிட்டு இவ்வளவு ஆரவார ஒலிகளும் எழுந்தன. அந்த ஒலிகளுக்கு மத்தியில் பரவசமடைந்த பக்தர்களின் தழு தழுத்த குரல்களிலிருந்து கிளம்பிய ''நமப் பார்வதீ பதயே!'', ''ஹரஹர மகா தேவா!'' முதலிய கோஷங்களும் ஏற்பட்டன.

தீபாராதனை சமயத்தில் பலர் பக்தியுடன் கைகூப்பி நின்றனர். பலர் கன்னத்தில் அடித்துக் கொண்டனர். இளவரசன் மகேந்திரனும் இளவரசி குந்தவியும் மற்றவர்களைப் பார்த்து விட்டுச் சடசட வென்று தங்கள் கன்னத்தில் போட்டுக் கொண்டது, வெகு வேடிக்கையாயிருந்தது.

தீபாராதனை முடிந்ததும் குமார சிவாச்சாரியார் கையில் விபூதிப் பிரஸாதத்துடன் கர்ப்பக்கிருஹத்துக்குள்ளிருந்து வெளியே வந்தார்.

சக்கரவர்த்தியின் அருகில் வந்து நின்று, சிவாச்சாரியார் உரத்த குரலில் கூறினார் : ''காலனைக் காலால் உதைத்தவரும், சிரித்துப் புரமெரித்தவரும், கஜமுகாசுரனைக் கிழித்து அவன் தோலை உடுத்தவரும், நெற்றிக் கண்ணில் நெருப்பை உடையவருமான திரிபுராந்தகரின் அருளால், பல்லவேந்திரருக்குப் பூரண வெற்றி உண்டாகட்டும்! புலிகேசியை வதம் செய்து வாதாபியை அழித்து வெற்றி வீரராய்த் திரும்புக! ஜய விஜயீபவா!''

இவ்விதம் சிவாச்சாரியார் சொல்லி விபூதிப் பிரஸாதத்தைச் சக்கரவர்த்தியின் கையில் கொடுத்தார். அதை மாமல்லர் பக்தியுடன் பெற்று நெற்றியிலே தரித்த போது, உள்ளே சிவலிங்கத்துக்கு அருகில் எரிந்து கொண்டிருந்த தீபம் திடீரென்று சுடர் விட்டு எரிந்து அதிக ஒளியுடன் பிரகாசித்தது. அப்படி எரிந்த தீபப்பிழம்பிலிருந்து ஒரு சுடர் சடசடவென்ற சப்தத்துடன் கீழே விழுந்தது. சில விநாடி நேரம் பிரகாசமான ஒளி வீசி விட்டு மங்கி அணைந்தது.

இந்தச் சம்பவமானது, சக்கரவர்த்தி எந்த நோக்கத்துடன் கிளம்புகிறாரோ அந்த நோக்கம் நன்கு நிறைவேறும் என்பதற்கு ஒரு நல்லிமித்தம் என்ற எண்ணம் அங்கே கூடியிருந்த எல்லோருடைய மனத்திலும் ஏக காலத்தில் தோன்றவே, 'ஜய விஜயீபவா!'' ''ஹர ஹர மகாதேவா!'' என்ற கோஷங்கள் கிளம்பிக் கர்ப்பக் கிருஹம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் எல்லாம் அதிரச் செய்தன.

பல்லவேந்திரரின் இக் விஜயத்துக்கு ஏகாம்பரநாதர் அநுமதி கொடுத்து விட்டார் என்ற செய்தி வெளி மண்டபங்களிலும் கோயில் பிராகாரங்களிலும் கோயிலுக்கு வெளியே வீதிகளிலும் கூடியிருந்த ஜனங்களிடையே பரவி எங்கெங்கும், ''ஹர ஹர மகாதேவா!'' என்ற கோஷத்தைக் கிளப்பிற்று. அப்படிக் காஞ்சி நகரையே மூழ்கடித்த உற்சாக ஆரவார ஜயகோஷத்தில் கலந்து கொள்ளாமல் மௌனம் சாதித்தவன் ஒருவனும் அந்தக் கூட்டத்தில் இருந்தான். அவன் பல்லவ சக்கரவர்த்தியின் ரதசாரதியான கண்ணபிரான்தான்.

அமரர் கல்கி

# ஏழாம் அத்தியாயம்
# கண்ணனின் கவலை

கோபுர வாசலில் அழகிய அம்பாரிகளுடன் பட்டத்து யானைகள் நின்றன. அரண்மனையைச் சேர்ந்த தந்தப் பல்லக்குகளும் தங்கப் பல்லக்குகளும் பளபளவென்று ஜொலித்துக் கொண்டிருந்தன. சக்கரவர்த்தியின் அலங்கார வேலைப்பாடமைந்த ரதமும் இரண்டு அழகிய வெண்புரவிகள் பூட்டப் பெற்று நின்றது.

குதிரைகளின் கடிவாளத்தை இழுத்துக் கொண்டு கண்ணபிரான் தன் ஆசனத்தில் உட்கார்ந்திருந்தான். அவனுடைய முகத்தில் என்றுமில்லாத கவலை குடி கொண்டிருந்தது.

அந்த அழகிய தங்க ரதத்தையும் அழகே வடிவமாய் அமைந்த உயர் சாதிப் புரவிகளையும் பார்ப்பதற்காக ஜனங்கள் ரதத்தைச் சூழ்ந்து நின்றார்கள்.

அவர்களில் ஒருவன், "என்ன, சாரதியாரே! முகம் ஏன் வாட்டமாயிருக்கிறது?" என்று கேட்டான்.

கண்ணன் அந்தக் கேள்விக்கு மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை.

அப்போது பக்கத்தில் நின்ற இன்னொருவன், "கவலைக்குக் காரணம் கேட்பானேன்? நாளைக்குப் போர்க்களத்துக்குப் புறப்பட வேண்டுமல்லவா! பெண்சாதி பிள்ளையை விட்டு விட்டுப் போக வேண்டுமே என்ற கவலைதான்!" என்றான்.

இதைக் கேட்டதும் கண்ணபிரானுடைய கண்கள் நெருப்புத் தழல் போல் சிவந்தன. கையிலிருந்த குதிரைச் சாட்டையை - அந்த உயர் சாதிக் குதிரைகள் மேல் என்றும் உபயோகிக்க நேராத அலங்காரச் சாட்டையை - மேற்கண்டவாறு சொன்ன ஆளின் மீது கண்ணன் வீசினான்.

நல்லவேளையாக அந்த மனிதன் சட்டென்று நகர்ந்து கொண்டபடியால் அடிபடாமல் பிழைத்தான். சற்றுத் தூரத்தில் நின்றபடியே அந்த விஷமக்காரன், "அப்பனே! ஏன் இத்தனை கோபம்? உனக்கு யுத்தகளத்துக்குப் போக விருப்பமில்லாவிட்டால் ரதத்தை என்னிடங் கொடேன்! நான் போகிறேன்!" என்றான்.

அதற்குள் அவன் அருகில் நின்ற இன்னொருவன், "அடே பழனியாண்டி! எதற்காகக் கண்ணபிரானின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறாய்? அவனைச் சக்கரவர்த்தி நாளைக்குப் புறப்படும் சேனையுடன் யுத்தகளத்துக்குப் புறப்படக் கூடாது என்று சொல்லி விட்டாராம். அது காரணமாகத்தான் அவனுக்குக் கவலை!" என்று சொல்லவும், பக்கத்தில் நின்றவர்கள் எல்லோரும் "த்செள" "த்செள" "அடடா" "ஐயோ! பாவம்!" என்று தங்கள் அநுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

ஆலயத்திலிருந்து வெளிவந்த புவன மகாதேவி முதலியவர்களைக் கண்ண



பிரான் அரண்மனையிலே கொண்டு போய்ச் சேர்த்து விட்டுத் தன் வீட்டுக்குத் திரும்பினான்.

குதிரைகளைக் கொட்டடியில் விட்டுத் தட்டிக் கொடுத்து விட்டு கண்ணன் தன்னுடைய வீட்டுக்குள் நுழைந்த போது, அங்கே விநோதமான ஒரு காட்சியைக் கண்டான்.

கண்ணனுடைய மகன் பத்து வயதுச் சிறுவன், கையில் ஒரு நீண்ட பட்டாக் கத்தியை வைத்துக் கொண்டு, அப்படியும் இப்படியும் சுழற்றிக் கொண்டிருந்தான். அவ்விதம் அவன் கத்தியைச் சுழற்றிய போது, ஒவ்வொரு சமயம் அவனுடைய முகமானது ஒவ்வொரு தோற்றத்தைக் காட்டியது.

சில சமயம் அந்தப் பால்வடியும் முகத்தில் கோபம் கொதித்தது. சில சமயம் அந்த முகம் நெருக்கடியில் சிக்கிக் கஷ்டப்படுவதைக் காட்டியது. சில சமயம் எதிரியை வெட்டி வீழ்த்தியதனால் ஏற்பட்ட குதூகலத்தை அந்த முகம் உணர்த்தியது!

இவ்விதம் அந்தச் சிறுவன் கத்தியைச் சுழற்றி யுத்த விளையாட்டு விளையாடுவதைச் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்திருந்த கமலி வெகு உற்சாகத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்குத் தெரியாதபடி சப்தமின்றி வீட்டுக்குள்ளே வந்த கண்ணபிரான் மேற்படி காட்சியைப் பார்த்ததும் முதலில் அவனுடைய முகத்தில் சந்தோஷப் புன்னகை உண்டாயிற்று. புன்னகை ஒரு கணத்தில் மாறி முகச் சுளுக்கம் ஏற்பட்டது.

கோபமான குரலில், ''முருகையா! நிறுத்து இந்த விளையாட்டை!'' என்று



கண்ணபிரான் அதட்டியதைக் கேட்டதும் சிறுவன் பிரமித்துப் போய் நின்றான்.

கமலியும், வியப்பும் திகைப்புமாகக் கண்ணனைப் பார்த்தாள்.

"தலையைச் சுற்றிக் கத்தியை வீசி எறி! குதிரை ஓட்டும் சாரதியின் மகனுக்குப் பட்டாக்கத்தி என்ன வந்தது கேடு? வேண்டுமானால் குதிரைச் சாட்டையை வைத்துக் கொண்டு விளையாடு! கத்தியை மட்டும் கையினால் தொடாதே! தெரியுமா?" என்று கண்ணன் கர்ஜனை புரிந்தான். இதைக் கேட்ட சிறுவன் கத்தியை இலேசாகத் தரையில் நழுவ விட்டுக் கமலியை அணுகி வந்து அவளுடைய மடியில் உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான்.

கமலி, "இது என்ன கண்ணா! குழந்தையை எதற்காக இப்படி அழச் செய்கிறாய்? நாளைக்கு நீ யுத்தகளத்திற்குப் புறப்பட்டாக வேண்டும். திரும்பி வர எத்தனை நாள் ஆகுமோ, என்னவோ?" என்றாள்.

"கமலி! அந்த ஆசையை விட்டு விடு! உன் புருஷன் போர்க்களத்துக்குப் போகப் போவதில்லை. குண்டுச் சட்டியில் குதிரை ஓட்டிக் கொண்டு நான் காஞ்சி நகரத்திலேயேதான் இருக்கப் போகிறேன். சக்கரவர்த்தியின் கட்டளை அப்படி!" என்றான் கண்ணன்.

கமலியின் முகத்தில் அப்போது சொல்லி முடியாத ஏமாற்றத்தின் அறிகுறி காணப்பட்டது.

"இது ஏன் கண்ணா? சக்கரவர்த்தி எதற்காக உன்னை இப்படி வஞ்சனை செய்தார்? கால் ஒடிந்த ஆயனச் சிற்பியைக் கூடப் போர்க்களத்துக்கு அழைத்துப் போகிறாராமே?" என்று கேட்டாள்.

"இராமர் வானர சைனியத்தோடு இலங்கைக்குப் போனாரே, அப்போது அந்த இலங்கைத் தீவைச் சமுத்திரத்தில் அமிழ்த்தி விட்டு வந்திருக்கக் கூடாதா?" என்றான் கண்ணபிரான்.

"என்ன இப்படிப் புதிர் போடுகிறாய்? இராமர் இலங்கையைச் சமுத்திரத்தில் அமிழ்த்தாததற்கும் நீ போருக்குப் போகாததற்கும் என்ன சம்பந்தம்?" என்றாள் கமலி.

"சம்பந்தம் இருக்கிறது. இலங்கை அப்போது சமுத்திரத்தில் மூழ்கியிருந்தால், அந்த ஊர் இளவரசர் இப்போது இங்கே வந்திருக்க மாட்டார் அல்லவா? அவருக்கு ரதம் ஓட்டுவதற்காக நான் இங்கே இருக்க வேண்டுமாம்! சக்கரவர்த்தியின் கட்டளை!"

"ஆஹா! அப்படியானால் மானவன்மரும் யுத்தத்துக்குப் போகப் போவதில்லையா? நமது சக்கரவர்த்தியும் அவரும் சிநேகிதம் என்று சொல்கிறார்களே?"

"பிராண சிநேகிதந்தான். அதனாலேதான் இந்தத் தொல்லை நேர்ந்தது. மானவன்மர் போர்க்களத்துக்கு வந்து அவருடைய உயிருக்கு அபாயம் நேர்ந்து விட்டால், இலங்கையின் இராஜவம்சம் நசித்துப் போய் விடுமாம். மானவன்மருக்கு இன்னும் சந்ததி ஏற்படவில்லையாம். ஆகையால், இலங்கை இளவரசர் போருக்கு வரக்கூடாதென்று சக்கரவர்த்தியின் கட்டளை. அவருக்காக என்னையும் நிறுத்தி விட்டார்!"

"இதுதானே காரணம்? அப்படியானால், நீ கவலைப்பட வேண்டாம், கண்ணா! கூடிய சீக்கிரத்தில் இலங்கை இளவரசரும் நீயும் போருக்குப் புறப்படலாம்!" என்றாள் கமலி.

"அது என்னமாய்ச் சொல்லுகிறாய்?" என்று கண்ணபிரான் சந்தேகக் குரலில் கேட்டான்.

"காரணத்தோடுதான் சொல்லுகிறேன். இலங்கை இராணிக்குச் சீக்கிரத்தில் குழந்தை பிறக்கப் போகிறது."

"ஓகோ! இலங்கை இளவரசிக்கு உடம்பு சௌக்கியமில்லை என்று சொன்னதெல்லாம் இதுதானா?

"ஏகாம்பரேசுவரா! இலங்கை இளவரசிக்குப் பிறக்கும் குழந்தை, ஆண் குழந்தையாய்ப் பிறக்கட்டும்!" என்று கண்ணன் ஏகாம்பரர் ஆலயம் இருந்த திக்கு நோக்கிக் கைகூப்பி வணங்கினான்.

(தொடரும்)

---



"அடிக்கடி ஞாபக மறதி ஏற்படுது டாக்டர்!"

"எப்படி?"

"எனக்கு உடம்பு சரியில்லாமப் போகும் போதெல்லாம் நல்ல டாக்டர்கிட்டே போகணும்னு நினைப்பேன்... ஞாபகமறதியால உங்ககிட்டேயே வந்துடறேன்!"

- சேலம் நீலமேகம்

# அரைமணி நேரம் செலவிடத் தயாரா?




## ஆம்... உங்களது முன்னேற்றத்திற்காக, தினசரி அரைமணி நேரம் செலவிடத் தயாராக இருக்கிறீர்களா? அப்படியானால் மேற்கொண்டு படியுங்கள்!...

★ வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா நீங்கள்?

★ ஆங்கில மொழியில் போதிய புலமையின்மை உங்களது முன்னேற்றத்திற்கு ஒரு தடையாக இருக்கிறதா?

★ பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் ஆற்றல் பெற முடியவில்லையே என்று வருத்தப்படுகிறீர்களா?

★ கவலையை விடுங்கள்... நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை அடைய உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் ஒதுக்கினால் போதும்!

ஆம்- இந்த அரைமணி நேரத்தில் நீங்கள் தினசரி மேற்கொள்ள வேண்டிய பயிற்சியினை மிகவும் எளிய முறையில் சொல்லித் தந்து, நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் உரையாட தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சி அளிக்கிறோம்.

எனவே, ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.

என்ன? பயிற்சிக்காக தினசரி அரை மணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா?

அப்படியானால், உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சியாக ஒரு ஐந்து நிமிடம் செலவு செய்து ஒரு போஸ்ட் கார்டில் "நான் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று எழுதி, .

---

**விவேகானந்தா கல்வி நிலையம்,**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

---

என்ற முகவரிக்கு இன்றே அனுப்புங்கள் பயிற்சி பற்றிய விவரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கிறோம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

NAGA

சாப்பிட்டு முடித்ததும் இயந்திர கதியில் பாண்டை மாட்டிக் கொள்கிறேன். சட்டையைப் போட்டுக் கொள்கிறேன். தலையை இன்னொரு முறை வாரி விட்டுக் கொள்கிறேன். சட்டைப் பையில் பர்ஸ்...? இருக்கிறது. செலவுக்குப் பணம்...? இருக்கிறது. கர்சிப்...? உம்.

கடைசி நாளானதால் இன்று டிபன் வேண்டாம். அண்டர் செகரடரிகள் கொடுக்கும் பார்ட்டி மத்தியானம்.

இன்றோடு கடைசி, இந்த வேஷத்துக்கு. இன்று நான் ஓய்வு பெற்றாக வேண்டும். எனக்கு வயது ஐம்பத்தெட்டு.

படி இறங்குகிறேன். என் 'மூட்' அறிந்து ஐயம் மௌனமாக வழி அனுப்புகிறாள். வழியில் தினமும் பார்க்கும் அறிமுகம் உள்ள முகங்கள், அறிமுகம் இல்லாத மற்றவர்கள்...

தலைமைச் செயலகம். பழைய கட்டடத்தை வலது பக்கம் சுற்றிக் கொண்டு புதுக் கட்டடம். லிப்ட். கியூ வரிசையில் ஏழெட்டுப் பேர்.

"Good Morning, Sir..."

"Last day in service போலிருக்கு..."

"Wish you a peaceful retired life..."

''அப்புறம் ரூமுக்கு வருகிறேன் சார்...''

மனம் கனக்கிறது. யார் ரிடையர்மெண்டைப் பற்றிப் பேசினாலும் உடைந்து போய் விடும் போலிருக்கிறது.

என் அறை... டெபுடி செகரட்டரி...

முன்பக்கம் டைப்ரைட்டருடன் பி. ஏ., ஸ்டூலில் பியூன். மேஜையில் மூன்று போன்கள். கடைசி நாளானாலும் இன்னமும் பைல் கட்டுகள்...



சரசரவென்று பைல்கள் நகருகின்றன. பியூன் அடுத்த கட்டைக் கொண்டு வந்து வைக்கிறான்.

''சார்...'' செக்ரட்டரி கூப்பிடுகிறார்...

# விடிவெள்ளி

''சார். செக்ஷன் ஆபீசர்கள் உள்ளே வரலாமா என்று கேட்கிறார்கள்...''

''ஓ... யெஸ்...''

''வாங்க... வாங்க... உட்காருங்க...''

''இத்தனை நாட்கள் சொன்ன 'வாங்க'வுக்கும் இன்றைய 'வாங்க'வுக்கும் எத்தனை வித்தியாசம்...''

இத்தனை நாட்கள் வரலாமா என்று கேட்டுக் கொண்டு உள்ளே வருபவர்களைக் கூட, வந்ததும் நிமிர்ந்து பார்க்க ஐந்து நிமிஷம், பத்து நிமிஷம் ஆகும். பார்த்துக் கொண்டிருக்கும் பைல்கள் சிந்தனை முழுவதையும் அப்படி ஆக்கிரமித்துக் கொண் டிருக்கும். இன்று அவர்களைப் பார்த்ததுமே ஒரு பரிவு...

மாற்றி மாற்றிப் பேசுகிறார்கள்.

'We will be missing you a lot, sir'

''நாளையிலிருந்து இந்த ரூமே வெறிச் என்று இருக்கும் சார்...''

''ஐந்து வருஷமா ஒரே மினிஸ்ட்ரியில் ஒரே சீட்டில் இருந்த டி. எஸ். நீங்க ஒருத்தர் தான் சார்...''

''ஜே. எஸ். ப்ரமோஷன் வந்திருக்கணும். நாங்கள் எல்லாம் சந்தோஷப்பட்டிருப் போம்...''

ஒவ்வொருவரும் பேசப் பேச என்னுள் ளும் பிரிவுத் துக்கம் பொங்குகிறது.

கைகுலுக்கி விட்டு ஒவ்வொருவராக வெளியேறுகிறார்கள்.

ஆபீசை விட்டுக் கிளம்புவதற்கு ஆறு மணி ஆகி விடுகிறது. லிப்டிலிருந்து வெளியே வந்ததும் என்னை வீட்டில் கொண்டு விட அரசு கார் நிற்கிறது. மற்ற அலுவலர்கள் விடைபெற்றுக் கொள்ள, வீடு வரை கொண்டு வந்து விட இரண்டு மூன்று பேர் மாலைகளை எடுத்துக் கொண்டு கூட வருகிறார்கள். வீட்டுக்குள்ளே வந்து இரண்டு நிமிஷம் உட்கார்ந்ததும் ''வரோம் சார். எங்களை எல்லாம் மறந்து விடாதீங்க சார். முடிந்த போது அப்பப்ப ஆபீசுக்கு வாங்க சார்...'' என்று சொல்லிக் கொண்டு கிளம்பு கிறார்கள்.

தனிமையில் உட்காருகிறேன். மனம் கனக்கிறது.

நாளையிலிருந்து என்ன செய்வது...?

வேறே எங்காவது வேலைக்கு முயற்சி செய்யலாமா? என்ன மாதிரி வேலை கிடைக்கும்? வேலை வேண்டாம் என்று வீட்டிலேயே சும்மா உட்கார்ந்திருக்க முடி யுமா...? தலைமைச் செயலகத்தில் பொறுப்பு வாய்ந்த டெபுடி செகரட்ரி என்ற பதவியை வகித்து விட்டு, ஐம்பத்தெட்டு வயதுக்கு மேல் சின்னதொரு அலுவலகத்தில் சின்ன தொரு மேஜையடியில் உட்கார முடி யுமா...?

திடீர் என்று கிழவனாகி விடு வோமோ...? ஒருவருக்கும் உபயோகம் இல் லாதவன் ஆகி விடுவோமோ...?

புரண்டு புரண்டு படுக்கிறேன். மணி பன்னிரண்டு அடிக்கிறது.

''தூக்கம் வரவில்லையா...?'' ஜயம் கேட்கிறாள்.

''ஆமாம். நாளையிலேருந்து என்ன பண்றது? எப்படிப் பொழுது போகும்னு யோசனையாகவும் கவலையாகவும் இருக்கு...''

''ரிடையர் ஆகிற மத்தவர்களெல்லாம் என்ன பண்றாங்கள்?''

''பாதிப் பேர் மார்க்கெட், பஸ் ஸ்டாண்ட் பெஞ்சிலேயும் மீதி பாதிப் பேர் ரயில்வே ஸ்டேஷன் பெஞ்சிலேயும் உட்கார்ந்து கொண்டு சக கிழவர்கள்கிட்டே பாலிடிக்ஸ் பேசறாங்க. நான் அந்த மாதிரி டைப் இல்லையே...''

''எனக்குத் தூக்கம் வரது. ராமா, ராமான்னு சொல்லிண்டே தூங்குங்கோ. ஆமாம். நினைவு இருக்கா இல்லையா, நாளைக்குக் காலையிலே வெங்கடேசுவரா கல்யாண மண்டபத்துக்குப் போகணும். கட்டு சாதக் கூடை. நேத்திக்கு மாப்பிள்ளை அழைப்பு. இன்னைக்குக் கல்யாணம், ரிசப் ஷன், எதுக்குமே நீங்க வரல்லே. ரிடையர் மெண்ட் டே, ரிடையர்மெண்ட் டேன்னு எத்தனை பேர்கிட்டே சொல்றது...''

வ.சா. நாகராஜன்

''ஓ... ஆமாம்.. சரி, போகலாம். மாப்பிள்ளைப் பையன் எப்படி இருக்கான்? இந்துவுக்கு 'மாச்'சாக இருக்கானா...?''

இந்து என் ஒன்றுவிட்ட தம்பி பெண். பெண் குழந்தைகள் இல்லாத இந்த வீட்டில் சின்ன வயசில் இரண்டு மூன்று வருஷங்கள் இருந்து படித்தாள். அப்படி ஓர் அழகு. சமர்த்து அவள். என் ரிடையர்மெண்ட் தினம் பார்த்து வந்தது அவள் கல்யாணம்! முதல் நாள் சாயங்காலமும் போக முடியவில்லை. முகூர்த்தத்துக்கும் போக முடியவில்லை. நாளைக் காலை கட்டுச் சாத ஃபங்ஷனுக்குப் போக வேண்டும். அப்பாடா... நிம்மதியாக ஃபங்ஷனில் கலந்து கொள்ளலாம். ஆபீசுக்குக் கிளம்ப வேண்டுமே என்ற அவசரம் இல்லை. அடுத்த வாரம் கலெக்டர் கூட்டத்துக்கு அஜண்டா தயார் செய்ய வேண்டுமே என்ற கவலை இல்லை....

மறுநாள் காலை.

எட்டு மணிக்குக் கல்யாண சத்திரத் துக்குப் போன போது எல்லாக் கல்யாணங் களிலும் கல்யாணத்துக்கு மறுநாள் தெரியும் ஒரு சோகம் கலந்த இழை ஒவ்வொன்றிலும் தெரிகிறது.

எல்லோரையும் விட்டு விட்டுப் புக்க கத்துக்குக் கிளம்ப இருக்கும் இந்து அழுது வீங்கிய கண்களுடன் வருகிறாள். சற்றுத் தள்ளித் தனியாக அவளை அழைத்துப் போகிறேன். ''கல்யாணம் பண்ணிண்டியா, இந்தும்மா? நேத்து வர முடியல்லே. ரிடையர்மெண்ட் டே. அவரைப் பார்த் தேன். நல்ல பையனாக இருக்கார். எங்களை எல்லாம் விட்டுட்டு எங்கேயோ தனியாப் போறே. பெரியப்பாவை மறந்து போயிடாதே...''

''பெரியப்பா...'' என்று விம்மலுடன் என்னைக் கட்டிக் கொள்ளுகிறாள்.

''கலங்கக் கூடாது. நீ சமர்த்தாக இருப்பாய். எனக்குத் தெரியும்...''

''உம்... உம்... நேரமாகிறது.. இந்து, வாம்மா...'' என்று அழைக்கிறார்கள்.

கண்களைத் துடைத்துக் கொண்டு இயந்திர கதியில் நகருகிறாள்.

பட்டுப் பாயில் கணவனோடு உட்காரு கிறாள்.

சம்பிரதாயப் பேச்சுக்கள்...

வாசலில் பஸ் நிற்கிறது. பெட்டி, படுக்கைகள் ஏற்றப்படுகின்றன.

கணவன் கையைப் பிடித்துக் கொண்டு கிளம்பத் தயாராகிறாள். கிளம்புமுன் அப் பாவுக்கும் அம்மாவுக்கும் நமஸ்காரம் செய் யும் போது, குழந்தை மாதிரி கேவுகிறாள். இருபது வருஷப் பிணைப்பு ஒரே நாளில் பிரிய, அந்தக் கணம் அதைத் தாங்கிக்

கொள்ளும் பக்குவம் ஒருவருக்குமே இல்லை. உணர்ச்சிப் பிரவாகத்தில் எல்லோருமே தவிக்கிறார்கள். குளமாகும் கண்கள்...

"இந்து..." மாப்பிள்ளைப் பையன் அருகில் வந்து அழைக்கிறான்.

கவிட்ச் போட்டது மாதிரி உணர்ச்சிகள் ஒரே கணத்தில் உலர்ந்து போக, இந்து கணவன் கையைப் பிடித்துக் கொண்டு வாசலுக்கு நடக்கிறாள்.

பஸ் கிளம்புகிறது.

ஜன்னலருகிலிருந்து இந்து கையை ஆட்டுகிறாள். சற்றுமுன் பிரவாகமாகப் பொங்கிய கண்களில் இப்போது ஒரு பொட்டுக் கண்ணீர் இல்லை. கலக்கம் இல்லை. பளீர் என்று ஒரு சிரிப்பு அவள் அழகுக்குச் சோபை அளிக்கிறது.

இது எப்படி சாத்தியம்...?

இருபது வயது வரை சென்னையின் சௌகரிய வாழ்க்கையில், கல்லூரிப் படிப்பு அட்டகாசங்களில், தம்பி தங்கைகளின் அல்லோல கல்லோலத்தில், அம்மா, அப்பாவின் அரவணைப்பு சுகத்தில், உறவினர்கள், நண்பர்கள் என்ற பெரிய கூட்டத்தின் பிணைப்பில் ஊறிப் போனவள் எப்படி ஒரே நிமிஷத்தில் எல்லாவற்றையும் உதறி விட்டு, சிரித்துக் கொண்டே கிளம்புகிறாள்?

மனத்துக்குள் விடையைத் தேடிய போது விடிவெள்ளியாய் அது முளைத்தது. இந்து ஒரு புதிய, உற்சாகமான உலகத்தை எதிர்நோக்கிப் போகிறாள். இனிய எதிர்பார்ப்புகள் அவள் மனத்தில்; சவால்கள் அவள் முன்னே... புதுப்புது அனுபவங்கள் ஒவ்வொரு நாளையும் ஆவலுடன் எதிர்நோக்கச் செய்கின்றன. இந்த இனிய எதிர்பார்ப்புகள்தான் அவள் கண்ணீரைச் சில கணங்களில் காய வைத்து விட்டன.

திடீர் என்று மனம் இடிக்கிறது.

நான்...? ஆபீஸ் என்ற, வாழ்க்கையின் ஒரு படியைத் தாண்டி, அடுத்த படிக்கு வந்தாகி விட்டது. இனியும் பழைய படிகளைப் பற்றி என்ன நினைவு...

எனக்கும் ஒரு புதிய வாழ்க்கை தொடங்குகிறது... வித்தியாசமான பொறுப்புகள்; விச்ராந்தியான பொழுதுபோக்குகள்; குடும்பத்துடன் இதுநாள் வரை இல்லாத அமைதியான இணக்கம்... இவையெல்லாம் என் கண்முன்னே விரிய -

மனம் இலேசாகிறது...

இந்துவுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். கையசைப்பிலும், கண் ஜாடையிலும் எனக்கு ஒரு பெரிய உண்மையை உணர்த்தி விட்டாள்.

## அருள்வாக்கு



'அபரிக்ரஹம்' என்பதைப் பெரிய தர்மமாக சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. 'பரிக்ரஹம்' என்றால் உடைமை சேர்த்துக் கொள்வது; அப்படிச் சேர்த்துக் கொள்ளாமலிருப்பதே 'அபரிக்ரஹம்.' 'நீ ஜீவிப்பதற்கு எது அத்யாவச்யமோ, அதற்கு அதிகமாக ஒரு துரும்பு கூடச் சேர்த்துக் கொள்ளாதே' என்பதுதான் அபரிக்ரஹ தர்மம். இதை யோக சாஸ்திரத்தில் ஸாதகன் அடிப்படையாகக் கொள்ள வேண்டிய ஐந்து 'யம'ங்களிலேயே ஒன்றாகப் பதஞ்ஜலி (யோக ஸூத்ரத்தில்) சொல்லியிருக்கிறார். 'யமம்' என்றால் அடக்கி வைப்பது. மஹாபாபிகளையும் அடக்கி வைத்துத் தண்டிப்பதால் யமனுக்கு அப்படிப் பெயர். மனஸை அடக்குகிறதற்குப் பதஞ்ஜலி யோகஸூத்ரம் எழுதினார். அதிலே ஐந்து யமங்களாக அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம் (திருடாமை), பிரம்மசர்யம் ஆகியவற்றோடு அபரிக்ரஹத்தையும் சொல்லியிருக்கிறது. 'அது வேணும், இது வேணும்' என்று பொருளைச் சேர்த்துக் கொள்கிற ஆசை அடங்கணும் என்றே இதைச் சொல்லியிருக்கிறார். இந்த ஆசை அடங்கினால், பணத் தாசை, அதற்காக எந்த நேரத்துக்கு வேண்டுமானாலும் போய் என்ன தொழில் வேண்டுமானாலும் செய்யலாம் என்ற பறப்பு, எந்தப் பொய் புரளி வேண்டுமானாலும் பண்ணிப் பணம் பண்ணலாம் என்ற அரிப்பு எல்லாமே போய் விடும்.

ஜீவாதாரத் தேவைக்கு ஜாஸ்தியாக எதைச் சேர்த்துக் கொண்டாலும் அது கொள்ளையடித்து வைத்துக் கொள்கிற தோஷம்தான் என்று கருதி, அபரிக்ரஹ தர்மத்தைப் பின்பற்ற முயல வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

# பாமரன்

வேதரத்தினம் தேவையான சான்றிதழ்களை ஒன்றாகக் கோத்து எடுத்து, அவற்றைத் தமது ராசி மிக்க, கறுப்பு நிற ஃபைலில் வைத்து ஜாக்கிரதையாக அதன் 'ஜிப்பை' இழுத்து மூடினார்.

''அப்போ நான் போயிட்டு வர்றேன் வித்யா...''

''இந்த லோன் கிடைச்சுடுச்சுன்னா... நமக்கு நிம்மதியாயிருக்கும்...''

''நிச்சயம் கிடைச்சிடும். நடனகோபால் சாதாரண ஆள் இல்லே. ரொம்பச் செல்வாக்கு உள்ளவன். அதோட மாவட்ட அளவுல வங்கி யூனியன் லீடரும் கூட. அவன் பேரைச் சொன்னாலே எல்லாரும் கதிகலங்கிப் போறாங்க தெரியுமா?'' என்று வேதரத்தினம் சிரித்துக் கொண்டே சைக்கிளை எடுத்துக் கொண்டு வங்கிக்குப் புறப்பட்டார்.

கண்ணாடித் தடுப்புச் சுவர்களுக்கு இடையே வங்கி மேலாளர் ஃபைலுக்குள் மூழ்கியிருந்தார்.

''எக்ஸ்க்யூஸ் மீ சார்...''

''ஒன் மினிட் ப்ளீஸ்...!'' பைலுக்குள் மூழ்கியிருந்த மேலாளர் சற்றே தலையைத் தூக்கி இவரைப் பார்த்துச் சொல்லி விட்டு மீண்டும் ஃபைலுக்குள் மூழ்கினார்.

மேலாளரின் கனிவு அவருக்கு நம்பிக்கையூட்டியது.

''சார் சொல்லுங்க...'' மானேஜர் டொப்பென்று பைலை மூடி வைத்து விட்டுக் கேட்டார்.

''சார்... இந்த எஜுகேஷன் லோன் சம்பந்தமா...'' வேதரத்தினம் வாக்கியத்தை முடிக்கவில்லை.

''எஜுகேஷன் லோனா... சாரி சார். இந்த வருஷ 'கோட்டா' முடிஞ்சுட்டுதே!''

''சார்... நடனகோபால்தான் உங்களைப் பார்க்கச் சொன்னார்.''

''ஓ... நடனகோபால் அனுப்பிச்சாரா...? அதோ.. அங்கே அக்கவுண்டன்ட் இருக்கார். அவரைப் பாருங்க.''

''தாங்க்ஸ் சார்... பார்த்துட்டு வர்றேன்.''

அக்கவுண்டன்ட் எதிரே பவ்யமாய் நின்றார் வேதரத்தினம்.

''சார்...''

அக்கவுண்டன்ட் நிமிர்ந்தார் அயர்வுடன்.

''எஜுகேஷன் லோன் வேணும். மானேஜர் உங்களைப் பார்க்கச் சொன்னார்.''

அக்கவுண்டன்ட் எரிச்சலுடன் மானேஜர் இருந்த கண்ணாடி அறையை நோக்கி ஓர் அவல் பார்வையை வீசினார். பிறகு கடுப்புடன் இவரைப் பார்த்தார்.

''ரிகார்ட்ஸ் எல்லாம் தயார் பண்ணிட்டீங்களா?''

''எல்லாம் ரெடி சார்...''

''அப்படியா...! பையன் பேரு?''

''திலீப்குமார். திலீப்னு கூப்பிடுவோம்.''

''பி.ஈ.யா?''

''ஆமா சார்.''

''ஸிக்ஸ்டி பர்சென்டுக்கு மேலே மார்க் வேணும் சார்.''

''என் பையன் எய்ட்டி ஃபைவ் பர்சென்ட் எடுத்திருக்கான் சார்...'' மார்க் ஸ்டேட்மெண்ட்டை எடுத்து அவசரமாய் நீட்டினார் வேதரத்தினம்.

''இப்பல்லாம் நைன்டி பர்சென்டே சர்வ சாதாரணமாப் போயிட்டுது. மார்க்கெல்லாம் அள்ளித்தான் போடுறாங்க... உம்... கம்யூனிட்டி சர்டிபிகேட் வேணுமே...''

''இதோ இருக்கு... சார்...''

''காண்டக்ட் சர்டிபிகேட் வேணும். அப்புறம் உங்க 'சன்' எந்த காலேஜ்ல படிக்கிறாரோ... அங்கேயிருந்து ஒரு எஸ்டிமேட் வாங்கித் தரணும். அதை வச்சுத்தான் நாங்க லோன் 'சாங்ஷன்' பண்ண முடியும்.''

''எஸ்டிமேட் வாங்கிட்டேன் சார். இதை வாங்கறதுக்காகவே ரெண்டு நாள் ஆபீஸுக்கு லீவு போட்டுட்டு அலைஞ்சேன் சார்...''

''அப்புறம் லோன் வாங்கறதுன்னா சும்மாவா! எல்லா ரெகார்ட்ஸும் சரியா இல்லேன்னா ஹெட் ஆபீஸ்ல எங்களைக் கிழிச்சுருவாங்களே...'' அக்கவுண்டன்ட் உரத்த குரலில் சொன்னார்.

வேதரத்தினம் கூனிக்குறுகிப் போனார்.

''எஸ்டிமேட்டு அமௌண்ட் எவ்வளவு?''

தமயவேலன்

''நாலு வருஷத்துக்கு நாற்பதாயிரம் சார்.''

''நாற்பதாயிரமா? மேக்ஸிமம் லிமிட்டே இருபத்தையாயிரம்தான்!'' சொல்லி விட்டு அக்கவுண்டன்ட் உதட்டைப் பிதுக்கினார்.

''உங்க பே சர்டிபிகேட் வேணும்.''

''வைச்சிருக்கேன் சார்...''

''பையன் என்ன கோர்ஸ் படிக்கிறான்?''

''ஹார்டி கல்ச்சர்...''

''ஹார்டி கல்ச்சரா..?''

''பி.எஸ்ஸி. அக்ரியோட ஒரு பிராஞ்ச் சார்...'''

''தெரியும். தெரியும். ஒரு கோர்ஸ் சர்டிபிகேட் வாங்கி வரணும்.''

வேதரத்தினம் அதையும் எடுத்து பவ்யமாய் நீட்டினார்.

''எல்லா ரிகார்ட்ஸ்லேயும் ரெண்டு ரெண்டு காப்பி வேணும். எங்களுக்கு ஒண்ணு ஹெட் ஆபீஸுக்கு ஒண்ணு.''

''மூணே தயார் பண்ணிட்டேன் சார்...''

''சரி, அடுத்த திங்கட் கிழமை வாங்க. லோன் அப்ளிகேஷன் தர்றேன்.''

''அப்ளிகேஷன் எங்கிட்டேயே இருக்கு. நானே ஃபில்லப் செய்துட்டேன். சரிபார்த்துக் கொடுங்க...''

''அப்ளிகேஷன் யார் கொடுத்தாங்க?'' அக்கவுண்டன்ட் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

''நடவகோபால்...''

''அப்போ.. நீங்க ஹெட் ஆபீஸ்லேயே வாங்கியிருக்கலாமே!''

''அங்கே ஃபண்ட்ஸ் தீர்ந்து போச்சாம். அதனாலதான் உங்க பிராஞ்சுக்குப் போகச் சொன்னாரு...''

''அப்படியா... அடுத்த வாரம் வாங்க... பார்க்கலாம்.''

வேதரத்தினம் வீட்டுக்கு வந்த போது, ''என்னங்க ஆச்சு...?'' என்று கேட்ட மனைவி வித்யாவிற்கு வங்கியில் நடந்ததையெல்லாம் விஸ்தாரமாக விளக்கிச் சொன்னார்.

அடுத்த திங்கட்கிழமை -

தேர்தல் முடிவை எதிர்பார்க்கும் வேட்பாளரைப் போல் பரபரப்புடன் வங்கியினுள் நுழைந்தார் வேதரத்தினம்.

''குட் ஈவினிங் சார்... திலீப்குமார் லோன் விஷயமா...''

''எத்தனையோ பேர் வர்றாங்க. எல்லாரையும் ஞாபகம் வைக்கக் முடியுமா? அதுவும் இப்பல்லாம் 'டெபாசிட்' பண்ண வர்றவங்களை விட லோன் கேட்டு அலையறவங்கதான் ஏராளம்!'' முகத்தில்



அறைந்தது போல் பேசினார் அக்கவுண்டன்ட்.

வேதரத்தினம் நீட்டிய தாள்களை மறு பரிசீலனை செய்தார்.

''பையனோட பாஸ்போர்ட் சைஸ் போட்டோ ஒன்னு ஒட்டணும். அப்புறம் ரெண்டு பேர் ஷ்யூரிட்டி போடணும். அவங்க உத்தியோகத்துல இருக்கிறவங்களாயிருந்தா... அவங்களோட பே சர்டிபி கேட்டும் வேணும். அப்புறம் அவங்களும் 'பாண்டு' எழுதிக் கொடுக்கணும்.

வேகாத வெயிலில் வந்தவனுக்கு வெந்நீர் கொடுப்பது போல் இருந்தது அக்கவுண்டன்டின் கட்டளைகள். வேதரத்தினம் வெலவெலத்துப் போனார். அவருடைய சோர்வடைந்த முகம் அக்கவுண்டன்டுக்கே இரக்கத்தைக் கொடுத்திருக்க வேண்டும்.

''ஒன்னு செய்யலாம்...'' என்று பீடிகை போட்டார்.

''சொல்லுங்க சார். செய்யறேன்...''

''பையனுக்கு வயசு என்ன ஆச்சு?''

''பதினேழரை...''

''பதினெட்டுப் பிறந்தா... பையன் மேஜராயிடறான். அப்புறம் ஷ்யூரிட்டி வேணாம். அவனே பான்ட் எழுதிக் கொடுத்தால் போதும். அது கலபமும் கூட...''

''இன்னும் ஆறு மாசம் ஆகுமே சார்...''

''அதனால என்ன! உங்களுக்கும் சிரமம் குறையும். இல்லைன்னா... நீங்க ரெண்டு ஆளைத் தேடி அலையணும்.''

''சரி சார்... அப்படியே செய்யறேன்'' வேதரத்தினம் எழுந்தார்.

''மறந்துட்டேனே. பையன் பேர்ல ஒரு எஸ். பி. அக்கவுண்ட் ஓபன் பண்ணணும். அதையும் செய்துடுங்க.''

''சரி சார்...''

''ஏங்க... நம்ம பால்காரன் உங்களைப் பார்க்கணுமாம். ராத்திரி ஏழு மணிக்கு மேல வரச் சொல்லியிருக்கேன். இப்போ வந்திடுவான்...'' வீட்டிற்குத் திரும்பிய வேதரத்தினத்திடம் வித்யா கூறினாள்.

''உம்.'' அசுவாரஸ்யமாகத் தலையசைத்தார்.

''அய்யா... வணக்கங்க...''

''வா... காத்தமுத்து. என்ன விஷயம்?''

தன் கையிலிருந்த அழுக்குத் துணிப் பையிலிருந்து கசங்கிய சில காகிதங்களை எடுத்துக் கொடுத்தான் காத்தமுத்து.

''என்னப்பா இது?''

''பாங்கு கடன் மனுவுங்க. எனக்கென்னங்க நிரப்பத் தெரியும். எம்மவன் படிக்கறதுக்குக் கடன் கேட்டேனுங்க.. பாங்கு மானேஜர் இதைக் கொடுத்து நிரப்பிட்டு வான்னு... சொல்லிட்டாரு...!''

''பாங்கு லோனா... படிக்கறதுக்கா...?''

வேதரத்தினம் கடகடவென வாய்விட்டுச் சிரித்தார். வயிறு குலுங்கச் சிரித்தார்.

காத்தமுத்து திகைத்து விட்டான்.

''என்னங்கய்யா.. ஏன் இப்படிச் சிரிக்கிறீங்க...?''

''காத்தமுத்து, உங்க ஐயா பொறுப்பான உத்தியோகத்துலயிருக்காரு. அவரே அலையா அலையறாரு... உன்னால வாங்க முடியுமான்னு நெனைச்சுச் சிரிக்கறாரு...'' வித்யா குறுக்கிட்டுச் சொன்னாள்.

''காத்தமுத்து நான் டபுள் டிகிரி வாங்கினவன். எனக்கே தண்ணி காட்டறாங்க. உன்னோட நம்பிக்கையை நான் கெடுக்க விரும்பலே. சரி... அப்ளிகேஷனை ஃபில் லப் பண்ணித் தர்றேன்.''

வேதரத்தினம் கேட்ட பல தகவல்களைக் காத்தமுத்துவால் சரியாகச் சொல்ல முடியவில்லை. அரைகுறையாய் நிரப்பி, என்னென்ன தேவை என்பதையும் சொல்லி... அவனை வழி அனுப்பி வைத்தார்.

''பாவம்... அப்பாவி... உலகம் தெரியாதவன். எப்படி அலையப் போகி

றானோ...?'' வேதரத்தினமும் வித்யாவும் அவனுக்காகப் பரிதாபப்பட்டார்கள்.

ஆறு மாதங்கள் உருண்டோடின. வேதரத்தினம் மறுபடியும் வங்கியை நோக்கிப் படையெடுத்தார்.

அக்கவுண்டன்ட் நினைவில் வைத்திருந்தார். புன்னகையுடன் வரவேற்றார்.

குல்ஃபி சாப்பிட்டது போல் குளிர்ந்து போனார் வேதரத்தினம்.

''மானேஜர் எஸ்லஸ்ன்னுட்டார். எல்லாம் உங்க 'லக்கு'தான். ஆனா... நீங்க ஒரு சின்ன ஹெல்ப் பண்ணணும்...'' அக்கவுண்டன்ட் இழுத்தார்.

''என்ன வேணாலும் செய்யறேன் சார்...!''

''ஒரு நல்ல பார்ட்டியாப் பார்த்து ஒரு ட்வென்டி ஃபைவ் தௌசன்ட்... பிக்சட் டெபாசிட்ல ஒரு ரெண்டு வருஷத்துக்குப் போட ஏற்பாடு பண்ணிடுங்க. அப்படிச் செய்திட்டீங்கன்னா... உடனே லோன் சாங்ஷன் ஆயிடும்.'' அக்கவுண்டன்ட் ஆணி அடித்தாற்போல் பேசி முடித்தார்.

வேதரத்தினம் கோபத்தின் உச்சியில் நின்றார். ஆத்திரத்தில் அவர் கண்கள் நெருப்புத் துண்டங்களாய் மின்னின. பற்களை நறநறவென்று கடித்தார். ஆனாலும் தமிழ் மண்ணுக்கே உரிய பொறுமையுடன் எழுந்து நின்றார்.

''நீங்கள்லாம் விளங்க மாட்டீங்க... லோனும் வேண்டாம். ஒரு மண்ணும் வேண்டாம்...'' என்று கத்தி விட்டு அப்ளிகேஷன் தாள்களை ஆத்திரம் தீரக் கிழித்து அங்கேயே - அக்கவுண்டன்ட் மேஜையிலேயே வீசி எறிந்தார். காகிதத் துண்டுகள் காற்றில் பறந்தன.

வங்கி முழுதும் அவரை வேடிக்கை பார்த்தது.

ஆவேசப் புயலாய் வங்கியை விட்டுக் கிளம்பினார்.

''இவனுகளை ரெண்டுல ஒண்ணு பார்த்துடறேன். டெல்லிக்கே எழுதி இவனுகளைத் தண்ணியில்லாத காட்டுக்கு டிரான்ஸ்பர் பண்ண வைக்கறேன்.'' வீட்டிற்கு வந்த வேதரத்தினம் அடிபட்ட புலி போல் உறுமிக் கொண்டிருந்தார்.

''என்னங்க... என்ன ஆச்சு? பாங்குல என்ன நடந்தது...?'' வித்யா மெதுவாய் அவர் தோள்களைத் தொட்டு ஆசுவாசப் படுத்திக் கேட்டாள்.

அவர் கொட்டித் தீர்க்க ஆயத்தமானார். அப்பொழுது -

''அய்யா... வணக்கங்க...'' என்று வாசலில் காத்தமுத்துவின் குரல் கேட்டது.

''வா.. காத்தமுத்து...'' வித்யாதான் வரவேற்றாள்.

''அம்மா, ஐயாவோட கைராசிதாங்க... முன்னால... படிப்புக் கடன் மனு நிரப்பிக் கொடுத்தார்ல்லேம்மா... இன்னிக்கு முதல் தவணையா ரெண்டாயிரம் ரூபாய் தந்துட்டாங்கம்மா...'' பூரிப்புடன் காத்தமுத்து சொன்னான்.

வேதரத்தினம் நெஞ்சில் ஓர் இனம் புரியாத கலக்கம். தமக்கு நேர்ந்தமையின் அவலமா? காத்தமுத்துவுக்குக் கிடைத்ததில் வியப்பா? அவரால் என்னவென்று உணர முடியவில்லை.

''நீ... நீ... சொல்றதை என்னால நம்பவே முடியலே...''

''பின்ன என்னங்கய்யா... உங்ககிட்டே பொய்யா சொல்லப் போறேன். இந்தா பாருங்க செக்கு. எல்லாம் உங்க கைராசி தான்ய்யா...'' அவரைப் புகழ்ந்து கொண்டே அழுக்குத் துணிப் பையிலிருந்து செக்கை எடுத்து நீட்டினான்.


''இந்த ஆஸ்பத்திரி பூராவும் ஏ. சி. பண்ணி வெச்சிருக்கீங்களே, ஏன் டாக்டர்?''
''ஃபீஸை நினைச்சுப் புழுங்கறவங்களுக்கு வசதியா இருக்குமேன்னுதான்.''
- சீர்காழி வி. ரேவதி

வித்யாவுக்கே வியப்பாக இருந்தது.

''அம்மா... இந்தாங்க...'' என்று தன் சந்தோஷத்தின் அடையாளமாக ஒரு சீப்பு சிறுமலை வாழைப்பழத்தை எடுத்துப் பணிவோடு நீட்டினான்.

வித்யா வாங்கிக் கொண்டாள்.

''காத்தமுத்து உனக்கு அந்த பாங்குல தெரிஞ்சவங்க யாரும் இருக்காங்களா?'' வித்யாதான் கேட்டாள்.

வேதரத்தினம் இன்னும் தன் இயல்புக்கு வரவில்லை.

''எனக்கு யாரையும் தெரியாது அம்மா. எங்க ஊர்ல ஒரு ஆள் இருக்காரு. இந்த மாதிரி லோன் விஷயமெல்லாம் அவருக்கு அத்துபடிங்க. அவரைப் புடிச்சேன். கொஞ்சம் ரூபா செலவாகும்னாரு.. ஒத்துக்கிட்டேன். வேலை சுலபமா முடிஞ்சுடுச்சுங்க...''

காத்தமுத்து விளக்கினான்.

# கொலுசே! கொலுசே!

ஆர்.ஜீவா

"தேவி! இங்கே வா! உனக்கு எத்தனை தடவை சொல்றது? கொலுசைப் பள்ளிக்கூடத்துக்குப் போட்டுக்கிட்டு வர்றது...... அப்புறம் அவன் எடுத்துட்டான்.... இவன் எடுத்துட்டான்னு கண்ணீர் வடிக்கிறது! நாளையிலேயிருந்து கொலுசை உன் கால்ல பார்த்தேன்! கால ஒடச்சிடுவேன். போயி உக்காந்து தொலை!" - என்றார் தமிழ் ஆசிரியர் கண்ணன்.

"அய்யா..." மூன்றாம் வகுப்பு மாணவியான தேவி ஏதோ சொல்லி முடிப்பதற்குள், "என்ன கழுதை? போறியா ஒதைக்கட்டா?" என்று ஆசிரியர் மிரட்டவே, கலங்கிய கண்களைத் துடைத்தபடி தன் இருப்பிடத்தில் சென்று அமர்ந்தாள்.

மறுநாள் அதே தமிழ் வகுப்பில், "வெரிகுட்! நான் சொன்னதைக் கேட்டு அப்படியே செய்துட்டியே! மாணவர்களெல்லாம் தேவி மாதிரி...!" என்று ஆசிரியர் பாராட்டிய போது, தேவியின் தலையைப் பார்த்துத் திடுக்கிட்டார்.

"தேவி! உன் தலையிலே என்ன காயம்?"

தேவிக்கு அழுகை அணை கடந்த வெள்ளமெனப் புறப்பட்டு வந்ததை அவள் கண்கள் காட்டிக் கொடுத்தன.

"என்ன ஆச்சு? ஏன் அழறே?"

"நான் இனிமே கொலுசே போட்டுக்கிட்டு வர மாட்டேன் அய்யா! எங்க அப்பா ஒரு குடிகாரர். அவர் குடிக்க அம்மாகிட்டே காசு கேட்டார். குடுக்காததினால அவங்களை அடிச்சார். நான் அழுதேன். என்னைக் கட்டையால தலையில அடிச்சு, என் கொலுசைக் கழட்டி வச்ச இடம் எங்கேன்னு கேட்டார். நான் பயந்து போய் இருக்கிற இடத்தைச் சொன்னேன். உடனே அதை எடுத்து அடகுக் கடைக்குக் கொண்டு போயிட்டார். அய்யா! அவரு இது மாதிரி செய்வார்னுதான் எங்கம்மா, கொலுசு எப்பவும் என் காலிலேயே இருக்கட்டும்னு..." ஓவென்று அழுதாள் தேவி.

தமிழாசிரியர் மனம் உள்ளுக்குள்ளேயே அழ ஆரம்பித்தது.

"இன்னைக்கு வகுப்பு இல்லை!" என்று சொல்லி விட்டுக் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்தபடி அலுவலக அறையை நோக்கி நடந்தார்.

இன்லண்ட் லெட்டர் சிறுகதை

# இதழே, இதழே...

பனி -
சிந்தும் முகத்தினில் கட்டிக் கரும்பினைத்
தட்டிப்பிழிந்த இதழ்
அவன் -
தந்த சுகத்தினை அள்ளிக் குடித்துத்
தன் தாகம் தீர்ந்த இதழ்
இனி -
இன்ப இணைப்பினை இருவர் அடைந்திட
முந்திப் பிறந்த இதழ்
அவன் -
கொண்ட மனைவியள் கட்டுக் கவினுடல்
பட்டுத் துடித்த இதழ்
பொருள் -
இல்லை என்றவருக்கு இல்லை என்றுரைத்து
மெல்ல மடிந்த இதழ்
பணத் -
தொல்லை இல்லையென கொள்ளை இன்பமது
பொங்கி வழிந்த இதழ்
இனி -
வெள்ளை உள்ளமதில் உண்மை உள்ளதெனத்
தெள்ளெனக் காட்டும் இதழ்
அழும் -
பிள்ளை மகிழ்ந்திட தாயமிழ்து அருந்திடும்
பால்மணம் தோய்ந்த இதழ்
நல் -
மண்ணதில் பொன்னினைக் கொழித்திடும் உழவன்
பெருமிதம் படர்ந்த இதழ்
அவன் -
கண்ணினுள் மணியவள் காதல் கிழத்தி
பெய்மழை பொழிந்திடும் இதழ்
நல் -
எண்ணமில் கயவன் வஞ்சக மனத்தவன்
நஞ்சுமொழி பிறக்கும் இதழ்
நல் -
வண்ணமே பேசி மக்களையே (ஏ)மாற்றும்
அரசியல்வாதியின் இதழ்




பொன் விழா
போட்டிக் கவிதை

- எஸ். சுந்தரராஜன்

# நன்றே செய்க- அதை இன்றே செய்க

ஞானமலர் - 9

உடனடியாகச் செய்து முடிக்கக்கூடிய வேலைகளைக் கூட ஒத்திப் போடுவது என்பது சிலர் வழக்கம். அரசாங்க அலுவலகங்களின் சாபக்கேடு - ஏன் மானக்கேடு இந்தப் பிரச்னை. உடனே செய்யக்கூடிய காரியங்களைக் கூட ஒத்திப் போட்டு ஒத்திப் போட்டு மக்களை நடையாக நடக்க வைப்பது, நமக்கேன் வம்பு என்று முடிவே எடுக்காமல் பேப்பருக்கு மேல் பேப்பராக ஃபைலை வீங்க வைப்பது... காலதாமதம் என்பதை ஒரு கலையாகவே போதிப்பது... இவை எல்லாம் அரசுத் துறையின் அவமானங்கள்.

தனி மனிதர்களும் அப்படித்தான். பல் வலிக்கிறது என்று வாய் வலிக்கப் புலம்புவார்களே ஒழிய, மருத்துவரை உடனே பார்க்க மாட்டார்கள். ஆனால் வாழ்க்கையில் வெற்றி பெற்ற தலைவர்கள் (உண்மையான) உலக வழிகாட்டிகள், இதிகாச நாயகர்கள் எதையும் ஆழமாகச் சிந்தித்து, அறிவுபூர்வமாக முடிவெடுத்து உடனே செயலுக்கும் கொண்டு வருகிறார்கள்.

இராமனுக்கு முடிசூட்டுவது என்று தசரதர் நிறைய ஆலோசித்து உடனே முடிவெடுத்தார். எப்படி? ஆலோசனைதான் நீண்ட நேரம் நடந்ததே ஒழிய, பட்டாபிஷேகம் என்றதும் 'நாளைக்கு' என்று அதிரடியாகத் திர்மானிக்கிறார். அதற்குள் விதி விளையாடியது என்பது வேறு விஷயம். ஆனால் முடிசூட்டுவது என்று முடிவெடுத்த உடனே நாளை பட்டாபிஷேகம் என்கிற நடவடிக்கை வேகம் தசரதன் தலைமைக்கு அத்தாட்சி.

கைகேயி ''ஆட்சி இல்லை'' என்று இராமனுக்கு அறிவித்தாள். காடு போகத் துணிந்தான் காகுத்தன். கால அவகாசம் கேட்டானா? இடைக்காலத் தடையுத்தரவு கேட்டுப் போராடினானா? இல்லையே. காடு போவது என்று தீர்மானித்தவுடன் இன்றே போவது என்று முடிவு செய்தான். ''மின் ஒளிர்கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்'' என்று புறப்பட்டுப் போயும் விட்டான். ஒத்திப் போடுகிற மனோபாவம் அந்தத் தலைவனுக்கு இல்லை.

மகாபாரதத்தில் வரும் பீஷ்மன். அடேயப்பா என்ன உறுதி? என்ன மனோபலம். தந்தை சந்தனு. ஒரு பெண்ணை மணக்க விரும்புகிறார் என்ற செய்தியைத் தேரோட்டி மூலம் அறிந்து கொண்டான். (டிரைவருக்குத் தெரியாத ரகசியமா?) அந்த மீனவப் பெண்ணை வளர்க்கும் பெரியவனை வணங்கினான். தந்தைக்குப் பெண் கேட்டான்.

பரிமளகந்தி என்ற அந்த மீனவப் பெண்ணின் தந்தை நிபந்தனை ஒன்று விதித்தான். சந்தனுவின் முதல் மகன் பீஷ்மன்தான் என்றாலும் பரிமளகந்தி வயிற்றில் பிறக்கும் மகனுக்குத்தான் பட்டம் கட்ட வேண்டும் என்பதே அந்த நிபந்தனை. மீனவர் தலைவனின் நிபந்தனையை அறிந்ததும் பீஷ்மன் கால அவகாசம் கேட்கவில்லை. முடிவை ஒத்திப் போடவில்லை. தயக்கமின்றிச் சொன்னான்.

''உன் மகள் வயிற்றில் பிறக்கும் மகனுக்கு ஆட்சியை வழங்குவேன்.'' மீனவர் கிழவன் மிக மிக கெட்டிக்காரன். ''நீ நல்லவன். ஆனால் நாளை உன் வயிற்றில் பிறக்கும் பிள்ளை ஆசைப்பட்டு என் பெயரனை வென்று, கொன்று ஆட்சியைப் பிடித்து விட்டால்...?'' என்று இழுத்தான். அப்போதும் பீஷ்மன் தயங்கவில்லை. எடுத்த முடிவில் மாற்றம் இல்லை; குழப்பம் இல்லை. தெளிவாகச் சொன்னான் :

''எல்லோரும் கேளுங்கள். புத்திரப் பேறு இல்லாதவர்க்கு மோட்சம் இல்லை என்பது பற்றி எனக்குக் கவலை இல்லை. நான் மணம் முடிக்க மாட்டேன். மங்கையரைத் தீண்டி மகப்பேறு அடையேன். என் தந்தையின் ஆசை நிறைவேற நித்ய பிரம்மச்சர்யம் மேற்கொள்வேன்'' என்றான்.

வலிமையான முடிவுகளை உடனடியாக எடுத்து அமுல்படுத்தும் பலசாலிகள் ஒரு தேசத்தின் தேவை. அந்த இதிகாச புருஷர்கள்தான் இந்தியத் தலைவிதியை மாற்றி அமைக்கும் மகா புருஷர்கள். விநோபா, காந்தி, ராஜாஜி, படேல் போன்ற விவேகம் உள்ளவர்கள் அப்படிப்

சுகிசிவம்

பட்ட மகானுபாவர்கள். முடிவெடுக்காது குழம்புதல், எடுத்த முடிவைச் செயல் படுத்த மாட்டாது தயங்குதல், கூடுமான வரை ஒத்திப் போடுதல், இவை முன்னேற் றத்தின் முதுகெலும்பையே ஒடிப்பவை.

உண்ணாவிரதம், மௌனவிரதம், உணவுக் கட்டுப்பாடு, தீயபழக்கங்களை விடுவதாகக் கொள்ளும் சபதங்கள் இவற் றில் ஒத்திப் போடுதல் இருக்கக் கூடாது. ''சர்க்கரையைத் தவிருங்கள். கொழுப்பைக் குறையுங்கள்'' என்று மருத்துவர் அறிவுறுத் தினால் நாளை முதல் என்பவர்கள் நிரந்தர நோயாளிகள்தாம். 'இன்றே' என்ற இராம பிரான் வாரிசுகள் ஆரோக்கியசாலிகள்.

இன்று செய்யக்கூடிய காரியங்களை நாளைக்கு ஒத்திப் போடுவதால் என்ன நன்மை வந்து விடும்? எலக்ட்ரிக் பில்லைக் கடைசி தேதியில் ஏன் கட்ட வேண்டும்? மிக நீண்ட வரிசையில் ஏன் நெளிய வேண் டும்? காலை ரயிலுக்குப் போகிறவன் இரவே ஏன் பெட்டியை அடுக்கக் கூடாது! ரயில் பெட்டியா துணிப் பெட்டியா என்று புறப்படும் நேரப் போராட்டம் அவசியம் தானா? பள்ளிப் புத்தகங்களை இரவே அடுக்கி வைக்கப் பிள்ளைகளுக்குப் பழக்க முடியாதா?

தருமம் செய்கிறவர்கள் கூட இந்தப் பழக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்கிறார் திருவள்ளுவர். தருமனே தயங் கிய போது பீமன் மூலம் இந்த நல்லறிவு அவனுக்கு வாய்த்தது என்று ஒரு கதை உண்டு.

நாள்தோறும் தருமம் செய் வான் தருமன். ஒருநாள் தருமம் செய்து முடித்தபின்னர் ஒரு யாசகன் வந்தான். யாசகம் கேட்டான். தரும னுக்கு வேறு வேலைகள். அல்லது ஏதோ தயக்கம். ''நாளைக்கு வா... நாளை கண்டிப்பாக வா... என் கையால் நானே தருகிறேன்'' என் றான். பக்கத்தில் இருந்த பீமன் பெரிதாகக் கையைத் தட்டிச் சிரித் துக் காவலாளியைப் பார்த்து உத்தர விட்டான்.

''நாடு முழுவதும் நன்றாக அலங்கரியுங்கள். வீதி எல்லாம் விழாக் கோலம் பூணட்டும். இன்று ஒரு பொன்னாள்.''

தருமனுக்கு ஒன்றும் புரிய வில்லை. யாசகம் வாங்க வந்த வனை 'நாளைக்கு வா' என்றால் தம்பி ஏன் விழா எடுக்கிறான்? கேலி செய்கிறான்? அவனுக்குப் புரியவில்லை. தம்பியையே கேட் டான். பீமன் பதில் உரைத்தான் :

''அண்ணா.. நீர் பெரிய ஞானி யாகி விட்டீர். அதற்குத்தான் விழா.. யாருக்குமே தெரியாத உண்மைகள் உமக்குத் தெரிந்து விட்டன; அந்த யாச கனை நாளைக்குக் கண்டிப்பாக வா.. என் றீர். எனவே நாளை வரை அவன் நிச்சயம் உயிரோடு இருப்பான் என்பது உமக்குத் தெரிந்து விட்டது. மரணம் எப்போது வருமோ என்று நாங்கள் எல்லாம் அஞ்சிக் கொண்டிருக்கிறோம். நாளைக்குள் அவ னுக்கு மரணம் இல்லை என்று நீர் உறுதி யாக இருப்பதால் நீர் ஞானியாகி விட்டீர்.. அது மட்டும் இல்லை. அவனுக்கு நீர் உம் கையாலேயே நாளை தானம் தருவதாக வாக்களித்தீர். நாளை வரை உமக்கும் மரணம் இல்லை என்பது உமக்குத் தெரிந்து விட்டது. இன்றைக்கே - இப் போதே வேண்டுமானாலும் வரக்கூடிய மர ணத்தை நீர் நாளை வரை நிறுத்தி வைத்து விட்டீர்... நீர் மரணத்தை வென்று விட்டீர்... அதற்குத்தான் விழா'' என்றான் கேலியாக பீமன்.

தருமம் செய்வதானால் அன்றே, அப் போதே செய்ய வேண்டும். 'நாளைக்கு' என்று சொல்வது அறிவீனம். நாளைக்கு இருக்கப் போகிறோம் என்பது என்ன நிச்சயம்? ஆழ்வார் அறிவுறுத்துகிறார் :

''நாளை நாளை என்பீராகில்..
நம்முடை முறைதான் ஆவதும் அறியீர்
நமனுடை முறைதான் ஆவதும் அறியீர்''

அதற்குத்தான் திருவள்ளுவர் ''அன்றறி வாம் என்னாது அறம் செய்க'' என்றார்.



இதுவரை
திரையுலகம்
கண்டிராத
மாபெரும்
காவியம்!
'பென்ஹர்',
'டென்
கமாண்ட்மெண்ட்ஸ்'
வரிசையில் ஒரு
பிரமாண்டமான
தயாரிப்பு!
ஸ்ரீதேவியின்
திரையுலக
வாழ்வை
நிர்ணயிக்கப்
போகும் சவால்!
அமிதாப்பின்
புனர்வாழ்வுக்குப்
பூர்துயிரூட்டப்
போகும்
புதுப்புனல்! -

# அமிதாப்பின் கடைசிப் படம்

இப்படியெல்லாம் படப்பிடிப்பின் போதே பேசப்பட்டு, ''பாலிவுட்டில்'' மட்டுமல்லாமல், ''ஹாலிவுட்டிலும்'' பெரும் பரபரப்பை ஏற்படுத்திய இந்தித் திரைப்படம் 'குதா கவா.' மூன்றரைக் கோடி செலவில், நான்கு வருடங்கள் எடுக்கப்பட்ட படம்.

இவற்றோடு ஓர் இந்தி நடிகருக்கு மாற்றாக, ஒரு தென்னிந்திய நடிகரைப் புகுத்தியிருப்பதிலும், 'குதா கவா' அநேகமாக ஒரு முன்னோடிதான்! நாகார்ஜுன் ஏற்றிருக்கும் ரோலில், முதலில் சஞ்சைதத் ஒப்பந்தமாகி ஷூட்டிங் துவங்கியபோது, அவருடைய மார்கெட் நிலவரம் உயரவே அதன் காரணமாக கால்ஷீட்டுகளுக்கு அவர் தகராறு செய்ய, அவர் நீக்கப்பட்டு நாகார்ஜுன் இடம்பெற்றார்.

அமிதாப்பும், ஸ்ரீதேவியும் தியேட்டர்களைச் சுற்றி வட்டமிட்டு இராப்பகலாக, இதன் வெற்றியை நினைத்து இஷ்ட தெய்வங்களை வேண்டிக் கொண்டிருப்பதாகத் திரைப்பட வட்டாரங்கள் பேசுகின்றன. அதுவும் ஸ்ரீதேவிக்கு, முதலிடத்தைத் தக்க வைத்துக் கொள்ள இதுதான் கடைசி வாய்ப்பு என்பதால், அவர் 'ஜெயலலிதாவுக்'கென்று ஒரு பிரிவியூ ஷோ, திரையுலகப் பெரும் புள்ளிகளுக்கென்று (கமல், ரஜனி நீங்கலாக) ஒரு 'ஷோ' என்று வெளுத்துக்கட்ட ஆரம்பித்தார்.

மாமூலான காதல் கதைதான்; ஆனாலும் எல்லைப் பிரச்னைகளை மையமாகக் கொண்டு, ஆஃப்கானிஸ்தான், இந்தியா, நேபாளம் என்ற மூன்று நாடுகளைச் சுற்றிச் சம்பவங்கள் பின்னப்பட்டிருப்பதால் மூன்று வித நாகரிகங்களின் அடிப்படையில் காட்சியமைப்பு, உடையலங்காரங்கள், வசனங்கள், என்ற பிரம்மாண்ட மசாலாவுக்கு நிறைய இடம் கொடுத்திருக்கும் படம்.

திரையுலக சரித்திரத்திலேயே முதன் முறையாக, படத்தின் ட்ரெயிலர் போல் முக்கியமான காட்சிகளைத் தொகுத்து, இடையில் நடிக-நடிகையின் சிறப்புப் பேட்டிகளையும் இணைத்து, நாற்பது நிமிட வீடியோ காஸட் ஒன்றை வெளியிட்டிருக்கிறார்கள். இதன் விற்பனை, படத்தின் விற்பனையையே தோற்கடித்து விட்டதாம்! மேலும் மக்களைக் கவர, காஸட்டுடன் நடிக, நடிகையரின் ஆட்டோகிராப்கள், போட்டிக் கூப்பன்கள் என்று இதர விளம்பர உத்திகளுக்கும் குறைவில்லை!

படத்தின் இயக்குனரான முகுல் ஆனந்தைச் சந்தித்தோம். 'அக்னிபத்திற்காக' அமிதாப் சிறந்த நடிகருக்கான பரிசு பெற்றிருப்பதை ஒட்டி சந்தோஷித்துக் கொண்டிருந்தார். ''அமிதாப் அவார்டை வாங்கிய போது, நானே வாங்கியதாக மகிழ்ச்சி அடைந்தேன். மக்களின் ரசனை ஏற்றம் பெற்றிருப்பது வரவேற்கத் தக்கது....'' என்று நம்முடைய பேட்டிக்கு உற்சாகத்தோடு தயாரானார்.

''குதா கவா''வின் தனிப் பெரும் சிறப்புக்களாக நீங்கள் எதைக் கூறுவீர்கள்?''

''குதா கவாவின் உயிர் நாடியே அதன் கதைக் கருதான். தம் மனைவியைக் காண்பதற்காக 22 வருடம் பொறுமையுடன் காத்திருந்த இளைஞனின் காதல் காவியம் இது. அடிப்படையில் ஆஃப்கானியர்களுக்கும் இந்தியர்களுக்குமிடையே நிலவிய பரஸ்பர நேயத்தையும், இந்த இரு பெரும் கலாசாரங்களும் இணையப் பாலமாகக் கைபர் கணவாய் இருந்ததையும், படத்தில் சொல்லியிருக்கிறேன். இந்தப் படத்தில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு லொகேஷனையும் நீங்கள் நிச்சயமாக வேறெந்தப் படத்திலும் பார்த்திருக்க முடியாது என்பதும் படத்தின் இன்னொரு சிறப்பு.

கூடவே ஒரு சிறந்த படத்தின் தகுதிகளான நல்ல கதையம்சம், திருப்பு முனைகள், ஆத்மார்த்தமான நடிப்பு.... என்று எல்லாம் பொருந்தியிருக்கின்றன.''

''இந்தக் கதையை நீங்கள் தேர்வு செய்ய, ஏதேனும் விசேஷ காரணங்கள் உண்டா?''

'காபூலிவாலா'வில் வரும் 'பதான்' வியாபாரி நினைவிருக்கிறதா? அவர் ஜெயிலிலிருந்து விடுதலையாகித் திரும்பும் போது, தாம் தினமும் முன்பு திராட்சை முந்திரி வழங்கி வந்த குழந்தை, இப்போது தம்மை மறந்துவிட்டதைக் கண்டதும், தம் மகளும் இப்படித்தான் தம்மை மறந்து விட்டிருக்கக் கூடும் என எண்ணிக் கலங்குவார். அந்த ஒரு காட்சியை இன்றைக்குப்

## "பரபரப்புக்காக ஏதேதோ சொல்கிறார்கள்!"

'குதா கவா' பற்றி அமிதாப் என்ன சொல்லுகிறார்? டெலிபோனில் தொடர்பு கொண்டு கேட்ட போது, நேரடிப் பேட்டிக்கு நேரமில்லையென்று டெலிபோனிலேயே பதிலளித்தார்...

"இந்தப் படத்தைப் பற்றிய வதந்திகள் ஏராளம்! இது என்னுடைய கடைசிப் படமாம்; என் நிஜ வாழ்வைப் பிரதிபலிப்பதாக இருக்கிறதாம்! பரபரப்பை ஏற்படுத்த வேண்டுமென்பதற்காக ஏதேதோ சொல்கிறார்கள். நான் ஒப்பந்தம் செய்திருந்த படங்களில் இது கடைசி! இனி வேறு மாதிரிப் படங்களில், என் வயதுக்கேற்ற ரோல்களில்தான் நடிப்பேன். இந்தப் படத்தைப் பொறுத்தவரையில், யூனிட்டைச் சார்ந்த ஒவ்வொருவரும் - லைட்பாய் முதல் டைரக்டர் வரை - உயிரைக் கொடுத்து உழைத்திருக்கிறோம்; ஒரே குடும்பமாகப் பழகிப் பாடுபட்டோம். இவைதாம் என் நினைவில் நிற்கும் விஷயங்கள்!"

குதா கவா ரிலீஸான ஒரு வாரத்துக்குள் இப் படத்தைப் பார்த்த சிலரைச் சந்தித்துப் பேசிய போது, நடுத்தர வயதைத் தாண்டியவர்கள் மத்தியில் படம் பெரிய பாதிப்பை உண்டுபண்ணியதாகத் தெரியவில்லை! 'அரைத்த மாவு மட்டுமல்ல; புளித்த மாவும் கூட' என்று சலித்துக் கொள்கிறார்கள். இளைய சமுதாயத்தினர் மட்டும் படத்தைப் புகழ்ந்தார்கள்.



சரவன் ஐயர் (பள்ளி மாணவன்) : ஸூப்பர் படம்; ஹார்ஸ் ரைடிங்கும் ஃபைட்டும் அமர்க்களம்; ஸீனரி எல்லாம் இங்கிலீஷ் படம் பார்ப்பது போல் பயங்கர நாச்சுரலாக இருந்தது. சொன்ன சொல்லைக் காப்பாற்ற, குத்துப்பட்ட

பார்த்தாலும் என் கண்கள் குளமாகிவிடும்; உடல் சிலிர்த்துப் போகும்! நிமிட நேரத்துக்குத் தோன்றும் அந்தச் 'சிலிர்ப்பை', ஒரு முழுப் படத்திலும் பரவவிட்டுப் பார்வையாளர்களைப் பரவசப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் வெறித்தனமாகப் பரவியது. அதன் பலனாகத்தான் கதாசிரியர் சந்தோஷியுடன் கலந்தாலோசித்து, இந்தக் கதைக் கருவை மையமாக வைத்து, திரைக் கதையைத் தயாரித்தோம். இதில் வரும் பதான், (அமிதாப்): வியாபாரியல்ல! வீரன்! சொன்ன சொல் தவறாதவன். அந்நியரை விரட்டியடிக்கும், நாட்டுப் பற்றுக் கொண்ட நல்லவன். இந்தப் படத்தில், ஒரு காலத்தில் இந்தியர்கள் எவ்வளவு அன்புள்ளம் கொண்டவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதைக் காட்டியிருக்கிறேன். இப்போது மறந்துவிட்ட நம் நற்பண்புகளை நினைவுறுத்தி, 'நான் ஓர் இந்தியன்! - பெங்காலி, குஜராத்தி, தமிழன், தெலுங்கன்.... அல்ல' என்ற கருத்தை நிலைநிறுத்தும் எண்ணத்துடன்தான் இந்தக் கதையைத் தேர்ந்தெடுத்துப் படமாக்கினோம்!"

"நான்கு நீண்ட வருடங்களாகப் படம் பண்ணியதில், பிரச்னைகளும் அதிகமிருந்திருக்குமே!"

"பதினேழு நாட்கள் ஆஃப்கானிஸ்தானிலும், ஒரு மாதம் நேபாளத்திலும் மீதிப் படத்தை இந்தியாவிலுமாக எடுத்ததில் எக்கச்சக்கப் பிரச்னைகள் தாம்! முதலில் தட்ப வெட்பநிலை! ராஜஸ்தான் பாலைவன வெப்பத்திலிருந்து, காட்மண்டுவின் குளிர்ச்சி வரை எல்லோரும் வறண்டு, குளிர்ந்து, காய்ந்து நடுங்கினோம்! அடுத்து நில அமைப்பு - இதுவரை யாரும் நினைத்துப் பார்த்தேயிராத இடங்களில் நாங்கள் புகுந்து படமெடுத்தோம். மலைப் பிரதேசங்கள், கணவாய்கள், பள்ளத்தாக்குகள், மணல் வெளிகள் என்று எத்தனை வேறுபாடுகள்... ஆனால் அவை எங்களுக்குள் இல்லை - டெக்னீஷியன், ஹீரோ என்ற பாகுபாடின்றி அனைவரும் சேர்ந்தே கஷ்டங்களை அனுபவித்தோம். ஆரம்ப கட்டத்தில் தயாரிப்புக்கான கால நீளம் கருதி இப்படத்துக்குக் கால்ஷீட் தருவதில் தகராறு செய்து பிரச்னைகளை உருவாக்கிய கலைஞர்கள் கூட, படம் வளர வளர, அதன் முக்கியத்துவத்தையும், இதனால் தங்களுக்குக் கிடைக்க இருக்கும் எதிர்காலத்தையும் உணர்ந்து முழு ஒத்துழைப்பையும் தந்ததால் பிரச்னைகளின் கனம் தெரியாமல் போய்விட்டது!"

"உங்களுக்குச் சவால் விட்ட காட்சி ஏதாவது உண்டா?"

"முதல் சில காட்சிகளே சவாலாக அமைந்தவைதாம். ஆனால் அதைவிடப் பெரிய சவால் ஒன்றை நான் இப்படத்தின் மூலம் வெற்றிகரமாகச் சந்தித்திருக்கிறேன். என்னால் ஆடியன்ஸை உணர்ச்சி வசப்பட வைக்க முடியாது என்ற விமர்சகர்களின் கூற்றை இப்படத்தின் மூலம் தகர்த்தெறிந்து விட்டேன். படம் பார்த்த ஒவ்வொருவரும் உணர்ச்சிப் பிழம்பாய் வெளிவருவதைக் காண்கிறேன்!"

"இயக்குனரின் கைவண்ணம் பளிச்சிடும் காட்சி ஏதேனும்..."

"உண்டு... நிறைய உண்டு! இந்தப்

காயங்களுடன் பதான் அமிதாப் ராஜ்புத் போலீசாரிடம் கடைசி நிமிடத்தில் சரணடைவது மகா த்ரில்லிங் ஸீன். கதைதான் போர்.

*விசுவநாத். எம். (கல்லூரி மாணவர்):* காமிரா பேசுகிறது; அது அள்ளித் தந்திருக்கும் இயற்கை அழகுகள் ஏராளம். அமிதாப் - ஸ்ரீதேவி இருவர் நடிப்பும் ஓவர் ஆக்டிங் இல்லாமல் இயற்கையாக இருக்கிறது.

*அனில் பன்சாரி (என்ஜினியர்) :* இன்டர்வெல் வரையில் அப்படி ஒரு ''ஹா...வ்''! அதன் பிறகுதான் கொஞ்சம் சூடுபிடிக்கிறது. ஸ்ரீதேவி - நாகார்ஜுன் காதல் - மோதல் காட்சிகள் கொஞ்சம் கறுகறுப்பை வரவழைக்கின்றன. 'டயலாக்கை'ப் பதானியர்கள் பேசுவது போல் அமைக்க முயன்றிருக்கிறார்கள். மேக்கப்பையும் மீறிச் சில இடங்களில் அமிதாப்பும் ஸ்ரீதேவியும் முதுமையாகத் தெரிகிறார்கள்.

*அருணா கிருஷ்ணன் (கஸ்டம்ஸ்) :* கதையில் புதுமை இல்லை என்றாலும், கண்களில் நீர்த்துளிகளை எட்டிப் பார்க்க வைக்கும் சீன்கள் பலம். ஸ்ரீதேவி அமிதாப்புக்கு விடை அளிக்கும் காட்சி; அமிதாப் தன் பெண் ஸ்ரீதேவியைத் தொலைவிலிருந்து நோக்கும் காட்சி; போலீஸ் அதிகாரியின் பெண்ணைக் காப்பாற்றப் பொய் சாட்சி கூறும் காட்சி... இப்படி எத்தனையோ! படத்தில் காஸ்ட்யூம்ஸ் நேர்த்தியாக அமைந்திருப்பது ஒரு ப்ளஸ் பாயின்ட்.



படம் முழுக்க முழுக்க இயக்குனரின் படம்தான்! என்பதால் பெரிய பெரிய நட்சத்திரங்களின் ஆக்ரமிப்பு இருந்தாலும், டைரக்டர் - டெக்னீஷியன்களின் கைவண்ணத்தால்தான் அவர்களது திறமை இதில் பளிச்சிடுகிறது. காமிராவை அதிகம் நகர்த்தாமலேயே அதி அற்புதமாகப் படமாக்கியிருக்கும் காமிராமேன் ராவ் போன்ற டெக்னீஷியன்கள் முன், நட்சத்திரங்களின் ஜ்வலிப்பு மங்கலாகத்தான் எனக்குத் தெரிகிறது!''

''இப்படத்தைப் பற்றி மிகக் கவலையான விஷயம் என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?''

''அமிதாப், ஸ்ரீதேவி இருவரும் இதை ஓர் இறுதிப் போராட்டமாக நினைத்து, மற்ற ஷூட்டிங்குகளை நிறுத்திவிட்டு, இதன் வெற்றியைப் பற்றிப் பயங்கரமாகக் கவலைப்பட்டதுதான்! இது என்னுடைய படம் என்ற நிலை மாறி, சினிமா இன்டஸ்ட்ரியின் படம் என்ற நிலைக்குத் தாவி விட்டது. படத்தைப் பார்த்த கலையுலக நண்பர்களெல்லாம் 'கடந்த பத்து வருடங்களில் வந்த படங்களில் சிறந்தது இதுதான்' என்று ஒருமனதாகப் பாராட்டுகிறார்கள். ஏற்கெனவே அயல்நாடுகளில், இந்தப் படத்துக்கு, இதுவரை எதற்குமே கிட்டியிராத டிமாண்ட்! இங்கிலாந்து, அமெரிக்கா, வளைகுடா நாடுகள் போன்றவற்றில் இது சக்கைப் போடு போடுகிறது!''

''இப்படம் வசூலில் சாதனை ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கிறீர்களா?''

''வியாபார ரீதியாக இப்படம் ரிலீசுக்கு முன்பே ஐந்தாறு கோடி ரூபாயைக் குவித்து, இதுவரை இருந்த எல்லா ரிகார்டுகளையும் முறியடித்துவிட்டது! எனவே இது வசூலிலும் சாதனை ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கிறேன்.''

''சஞ்சயின் ரோல் நாகார்ஜுனுக்கு வழங்கப்பட்ட போது, அவரால் சஞ்சய்க்கு இணையாக நடிக்க முடிந்ததா?''

''இணையாகவா? பன்மடங்கு உயர்வாகவல்லவா நடித்திருக்கிறார். நாகார்ஜுன் நல்ல திறமைசாலி! பொறுப்புணர்ச்சி மிக்கவர்; வெற்றிகளின் கனம் இன்னும் அவர் தலைக்கு ஏறவில்லை! சஞ்சய் நேர் மாறான இளைஞர்; முதிர்ச்சி சிறிதுமில்லை; அவரது மூட், அவருடைய ஹேர் ஸ்டைல் போல நிமிடத்துக்கு நிமிடம் மாறும். தென்னிந்தியர்கள் கடமையுணர்ச்சியும் கட்டுப்பாடும் மிக்கவர்கள். எனக்கு அவர்களை ரொம்பப் பிடிக்கும் (என் மனைவியே மலையாளிதான்!) ரஜினி, ஸ்ரீதேவி வரிசையில் நாகார்ஜுனும் சிறந்த நடிகரே!''

''தென்னிந்தியர்களைப் பெரிதும் புகழும் நீங்கள், அவர்களின் சிறப்பு நட்சத்திரமான கமலை உங்கள் படங்களில் இடம் பெற வைக்காதது ஏன்?''

''கமல் நம்பர் ஒன் ரோல்களில்தான் நடிக்க ஒப்புக் கொள்வார். ஆனால் இந்தியில் அவருக்கு அந்த அளவு ஆடியன்ஸ் இல்லை. அதனால்தான் அவரை அணுகத் தயக்கமாக இருக்கிறது. ரஜினி தெற்கில் ஸூப்பர் ஸ்டாராக இருந்தாலும், இந்தியில் சைடு ரோல்கள் செய்யவும் தயங்க மாட்டார். அதனால்தான் அவர் இந்திப் படங்களில் இடம்பெறுகிறார்.''

– ஜெயஸ்ரீ ராஜ்

திரும்பிப் பார்க்கிறேன் - 36

# பாராட்டினார் பிரதமர்; படுத்தினார் திலீப்குமார்!

சென்னை ராஜ்பவனில் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரியை நேரில் சந்தித்துக் கலை நிகழ்ச்சிகள் மூலம் வசூலான தொகையை அளிப்பது என்று தீர்மானமாகிற்று. இதை சம்பந்தப்பட்ட கலைஞர்கள் எல்லோருக்கும் தெரிவித்துக் 'குடும்பத்துடன் வர வேண்டும்' என்று கேட்டுக் கொண்டேன்.

அடுத்து சிவாஜியுடன் ஒரு முக்கியமான விஷயம் குறித்து ஆலோசித்தேன். ''நமது கலைத்திறனைக் காண பொது மக்கள் தந்த பணத்தைப் பிரதமரிடம் தரப் போகிறோம், சரி; ஆனால் நாமும் இந்நாட்டின் குடிமக்கள்தாமே? யுத்த நிதிக்கு நாம் என்ன வழங்கப் போகிறோம்?'' என்று கேட்டேன்.

சிவாஜி ஒருகணமும் தயங்காமல் ''நீ சொல்வது சரி; நாமும் ஏதாவது செய்யத்தான் வேண்டும்'' என்றார்.

உடனே நான் எனது திட்டம் ஒன்றை விவரித்தேன். சிவாஜி ஒருகணம் திகைத்தாலும் அடுத்த வினாடியே, ''வெரிகுட்! அப்படியே செய்துடலாம். எல்லாரிடமும் சொல்லிடுங்க'' என்றார்.

குறிப்பிட்ட தினத்தில் எல்லாக் கலைஞர்களும் சித்ராலயா ஆபீஸ் வந்து சேர்ந்து, அங்கிருந்து ஒன்றாகக் கவர்னர் மாளிகைக்குப் புறப்பட்டுப் போனோம். பிரதமர் வர, வரவேற்பு அறையில் காத்திருந்தோம். வினாடி பிசகாமல் நேரத்தோடு லால் பகதூர் சாஸ்திரி வந்தார். நிதி திரட்ட நாங்கள் எடுத்துக் கொண்ட முயற்சிக்குப் பாராட்டுத் தெரிவித்து விட்டு, வசூல் தொகையைப் பெற்றுக் கொண்டார்.

அப்போதுதான் நான் ஏற்கெனவே திட்டமிட்டுப் பேசி வைத்திருந்தபடி காரியங்கள் நடக்க ஆரம்பித்தன. முதலில் நான் என் விரலிலிருந்த மோதிரத்தைக் கழற்றி மேஜை மீது வைத்தேன். என்னைத் தொடர்ந்து என் மனைவி தன் கழுத்திலிருந்த செயினைக் கழற்றி வைத்தாள். பிறகு ஒருவர் பின் ஒருவராக ஆண்களும் பெண்களும் - கலைஞர்களும் அவர்கள் குடும்பத்தினரும் - வரிசையாக வந்து அவரவர் அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றி மேஜை மேல் வைத்தனர். பெண்கள் தாலி தவிர மற்ற ஆபரணங்களைக் கொடுத்தனர். ஆண்கள் மோதிரம், செயின் என்று தந்தனர்.

பிரதமருக்கு ஒரே வியப்பு. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்க, ''உங்கள் தேசப்பற்று என் நெஞ்சை நெகிழ்த்துகிறது'' என்று தழுதழுத்த குரலில் சொன்னார். நான் சிவாஜியை நோக்கி ஒரு கேள்விக் குறியைப் பார்வையாலேயே தேக்க, சிவாஜி, ''திட்டம் சக்ஸஸ்'' என்பது போல் ஒரு புன்னகையுடன் கண் சிமிட்டினார்.

நான் நடிக நண்பர்களிடம், ''நீங்கள் எதையெல்லாம் பிரதமருக்குக் கொடுக்க விரும்புகிறீர்களோ; அதை மட்டும் அணிந்து வாருங்கள்'' என்று கூறியிருந்தேன். அதன்படியே நடிக - நடிகையரும் இதர டெக்னீஷியன்களும் நடந்து கொண்டு பிரதமரை அசத்தி விட்டார்கள். எல்லோருமே மகிழ்ச்சியில் திக்குமுக்காடும் மனத்துடன் வீடு திரும்பினோம்.

நான் வீனஸ் பிக்சர்ஸில் பார்ட்னராக இருந்ததும், பிறகு எந்தவித மனக் கசப்பும் இன்றிப் பிரிந்து, சித்ராலயா தொடங்கியதும் உங்களுக்கு ஏற்கெனவே தெரியும். இப்போது ஒரு விசித்திர நிலை என்ன ஏற்பட்டது என்றால், வீனஸ் பிக்சர்ஸுக்காக ஒரு ஹிந்தி படத்தை இயக்கித் தருமாறு எனக்கு அழைப்பு வந்தது!

பீம்சிங் இயக்கிய ''பாலும் பழமும்'' படத்தின் ஹிந்தி உரிமையை வீனஸ் பிக்சர்ஸ் நண்பர்கள் வாங்கி வைத்திருந்தனர். தவிர, தமிழில் சிவாஜி நடித்த கதாபாத்திரத்தில் ஹிந்தியில் நடிக்க திலீப்குமாரையும் 'புக்' பண்ணியிருந்தார்கள். அந்த ஹிந்தி படத்தைத்தான் நான் டைரக்ட் செய்ய வேண்டும் என்று கேட்டார்கள்.

சொல்லப் போனால் எனக்கு ரொம்பத் தயக்கமாகத்தான் இருந்தது. ''பாலும் பழமும்'' தமிழில் பயங்கர 'ஹிட்' ஆன படம். அதனை இயக்கி முத்திரை பதித்தவர் பீம்சிங். 'அவருடன் போட்டியிடுவது போல் அவர் படத்தை ஹிந்தியில் நாம் டைரக்ட் செய்வதா?' என்று எனக்குள் ஒரு கூச்சம்.

நான் கிருஷ்ணமூர்த்தியிடம் "நீங்கள் ஏன் பீம்சிங்கையே இந்தப் படத்தை ஹிந்தியிலும் டைரக்ட் செய்யும்படி சொல்லக் கூடாது?" என்று கேட்டேன்.

கிருஷ்ணமூர்த்தியோ பிடிவாதமாக, "கதையைத்தான் எடுத்துக் கொண்டிருக்கிறோமே தவிர, அதை ஹிந்தியில், திரைப் படமாக்கும் போது உங்களுடைய கற்பனைத் திறனும் டைரக்‌ஷன் ஆற்றலும் செயல்பட வேண்டும் என்றுதான் விரும்புகிறோம்" என்றார். போதாக்குறைக்கு, "பிடியுங்கள் அட்வான்ஸ்" என்று ஒரு தொகையையும் என் கரத்தில் திணித்து விட்டார்.

எனக்குச் சமாதானம் ஏற்படவில்லை. அன்று மாலையே பீம்சிங்குக்கு ஃபோன் செய்தேன். என் மனசில் இருந்ததை ஒளிவு மறைவு இல்லாமல் சொன்னேன். என் தயக்கம், அதற்கான காரணம் எதையும் விட்டு வைக்கவில்லை.



☛ முதல்வர், பிரதமர் ஆகியோருடன் திரையுலகப் புள்ளிகள்

கேட்டு விட்டுச் சிரித்தார் பீம்சிங். "ஸ்ரீதர்! நான் உங்க படங்களை விரும்பிப் பார்க்கிறவன். நீங்க "பாலும் பழமும்" கதையைக் கண்டிப்பாக ஹிந்தியில் டைரக்ட் பண்ணுங்க. ஒரே கதையை இரு தனித்தனி பாணி கொண்ட டைரக்டர்கள் இயக்கும் போது எப்படி வித்தியாசப்படுகிறது என்று பார்க்க இது ஓர் அரிய சந்தர்ப்பம். 'கோ அஹெட்'" என்றார்.

இப்படி அவர் பெருந்தன்மையுடன் உற்சாகமூட்ட நானும் வீனஸ் பிக்சர்ஸ் கிருஷ்ணமூர்த்திக்கு இறுதியான, மனப் பூர்வமான ஒப்புதலை அளித்தேன்.

## டைரக்டர் ஸ்ரீதர்

நானும் கிருஷ்ணமூர்த்தியும் திலீப் குமாரைச் சந்திக்க பெங்களூர் சென்றோம். நான் பள்ளிக்கூட நாட்களிலிருந்தே திலீப் குமார் ரசிகன். வெற்றிப் படங்களை மட்டுமல்ல; நாலு நாள் கூட ஓடாத தோல்விப் படங்களையும் விட்டு வைக்க மாட்டேன். பார்த்து, திலீப்பின் ஆற்றலை மட்டுமே மையப்படுத்தி ரசிப்பேன். அந்தகைய எனக்கு இன்று திலீப்குமாரையே டைரக்ட் செய்யும் வாய்ப்புக் கிட்டியதில் ரொம்ப மகிழ்ச்சியும் பெருமையும் ஏற்பட்டது. ஆனால் இந்த மகிழ்ச்சி பெங்களூர் சென்று திலீப்குமாரைச் சந்திக்கும் வரைதான் நீடித்தது!

அவர் தங்கியிருந்த ஓட்டலில் அவரைச் சந்தித்து, கதையை டிஸ்கஸ் பண்ணத்தான் செய்தோம். ஆ ன ா ல் பாலும் பழமும் க தை யை அல்ல! திலீப்குமார் தம்பாட்டுக்குப் புதுப்புதுக் கதைகளைச் சொல்வார். "பாலும் பழமும்" கதையை நான் கூற ஆரம்பித்தால், "அது இருக்கட்டும்; இதைக் கேளுங்க" என்று சொல்லி, இன்னொரு புதிய கதை கூறத் தொடங்குவார்! "கதை எப்படி இருக்கு?" என்று அபிப்பிராயம் கேட்பார். இப்படி இரண்டு நாள், நாலு நாள் என்று ஓடிக் கொண்டிருந்ததே தவிர, நான் "பாலும் பழமும்" கதையில் லேசான மாற்றங்களுடன் எழுதியிருந்த புதிய டிரீட்மெண்ட் விவாதத்துக்கு வரவேயில்லை! பெங்களூரில்தான் இப்படியென்றால் அடுத்த தடவை திலீப்குமார் சென்னைக்கு வந்த போதும் இதே கதைதான்!

'திலீப்குமார் அனாவசியமாக என் நேரத்தை வீணடிக்கிறார்' என்பதாக எனக்குத் தோன்றி விட்டது. அடுத்து நான் செய்தது என்ன?

## கல்கத்தா கடிதம் :



# மெட்ரோ போட்ட தப்புக் கணக்கு

கல்கத்தா மெட்ரோ ரயில் நிர்வாகம் நூறை இரண்டால் பெருக்கினால் இருநூறு என்று கணக்குப் போட்டது தப்பாகி விட்டது. நூறை இரண்டால் பெருக்கினால் 130தான் என்று இப்போது தெரிகிறது! எப்படி என்கிறீர்களா?

ஏப்ரல் முதல் தேதியிலிருந்து மெட்ரோ கட்டணம் இரட்டிக்கப்பட்டது. முன்பிருந்த ஒரு ரூபாய்க் கட்டணம் இரண்டு ரூபாய் ஆகிற்று. ஒன்றரை ரூபாய்க் கட்டணம் மூன்று ரூபாய் ஆகிற்று. மெட்ரோவுக்கு ஆகும் ஆண்டுச் செலவு சுமார் ஒன்பது கோடி ரூபாய். வருமானமோ சுமார் மூன்று கோடிதான். மெட்ரோ நிர்வாகத்தில் ஏற்படும் நஷ்டத்தை ஓரளவு ஈடுகட்டவே இந்தக் கட்டண உயர்வு என்றார்கள்.

ஆனால் கட்டண உயர்வு பற்றிய தங்கள் கருத்தைத் திட்டவட்டமாகத் தெரிவித்து விட்டார்கள் பொது மக்கள். முன்பு மெட்ரோவில் பயணம் செய்தவர்களில் மூன்றில் ஒரு பங்கினர் இப்போது மெட்ரோவில் பயணம் செய்வதை நிறுத்திக் கொண்டு விட்டார்கள். இதன் விளைவாகக் கட்டண உயர்வுக்குப் பின் மெட்ரோ வருமானம் மூன்றில் ஒரு பங்கே உயர்ந்திருக்கிறது.

ஆனால் மெட்ரோ நிர்வாகம் வருமானம் உயரும் என்ற நம்பிக்கையை இன்னும் இழக்கவில்லை. காரணம், பஸ், மினி பஸ், டாக்சிக்காரர்கள் கட்டண உயர்வுக்காகப் போராடி வருகிறார்கள். அவர்களின் கட்டண உயர்வு பற்றி ஆலோசனை செய்ய அரசாங்கம் ஒரு கமிட்டியையும் நிறுவியுள்ளது. ஆகவே விரைவில் பஸ், மினி பஸ், டாக்சிக் கட்டணங்கள் உயரலாம். அப்போது பலர் மறுபடியும் மெட்ரோவைப் பயன்படுத்தத் தொடங்கலாம் என்பது மெட்ரோ நிர்வாகத்தின் எதிர்பார்ப்பு!

### டிராமுக்குத் தலைவலி

டிராம்கள் ஓடும் ஒரே இந்திய நகரம் என்ற சிறப்பை இன்னும் சில ஆண்டுகளில் கல்கத்தா இழந்து விடும் போலிருக்கிறது.

டிராம்களால் ஒவ்வோராண்டும் ஏற்படும் நஷ்டம் சுமார் ஐந்து கோடி ரூபாய். அவ்வப்போது கட்டணத்தை உயர்த்தியும் இந்த நஷ்டத்தை ஈடுசெய்ய முடியவில்லையாம். ஆகையால் டிராம்களை எடுத்து விட்டு அவற்றுக்குப் பதிலாகச் சொகுசு பஸ்களை விடலாமா என்று யோசித்து வருகிறது அரசாங்கம்.

- எஸ். கே. எம்.

---



" 'அமைச்சரின் செல்வமே வருக'ன்னு ஆர்ச், பேனர், போஸ்டர் எல்லாம் அமர்க்களப்படுதே, என்ன விஷயம்?"

"எம். கே. ஜீ. பால் பண்ணை அவரோட மகனுக்குப் பிரம்மாண்டமா விழா எடுத்து, தங்கத்துல பல்பம் செஞ்சு கொடுக்கப் போறாங்களாம்!"

- தீ. ராஜு




United Nations Children's Fund

# NEEDS LADY VOLUNTEERS

## TO PROMOTE UNICEF GREETING CARDS AND ALLIED PRODUCTS

### IF YOU ARE :

- A DYNAMIC, CONFIDENT PERSON, LOOKING FOR A CHALLENGE.
- LIVING IN A MEDIUM/LARGE CITY WITH INDUSTRIAL/BUSINESS ESTABLISHMENTS.
- HAVE TIME TO GIVE, AND AN INTEREST IN FUND RAISING.
- HAVE A LARGE CIRCLE OF WELL PLACED FRIENDS AND COLLEAGUES.
- WOULD LIKE TO BE PART OF UNICEF'S WORLD-WIDE EFFORT TO HELP SAVE MILLIONS OF CHILDREN FROM DEATH, DISABILITY AND DISADVANTAGE.

* You will find this a rewarding occupation and will be serving a worthy cause.

* We offer handsome honorarium towards reimbursement of expenses.

*Please write within 10 days with a short note about yourself and your contacts to:*

**The Chief**
**UNICEF,**
**Greeting Card Operation,**
**133, Kodambakkam High Road,**
**Madras - 600 034**

**unicef** GREETING CARDS
DO GOOD DEEDS FOR CHILDREN

---

ஜுலை 1
முதல்
வருகிறது...






ஒவ்வொரு இதழிலும்

## பட்டுக்கோட்டை பிரபாகர்

— முழு நாவலுடன்
+
புதுமையான பகுதிகளுடன்...

ஏஜெண்டுகள் உடனே விண்ணப்பிக்கவும்:



ஆத்மா பப்ளிகேஷன்ஸ்,
11/11 ஜீவரத்தினம் நகர்,
அடையாறு, சென்னை-20.

# காலம்

இந்தக் கடிகாரம் வந்த தினம் இவனுக்கு இன்னும் ஞாபகம் இருந்தது...

அன்று லேசாகத் தூறல் இருந்தது. இருட்டிப் போய் தெரு விளக்கு வைக்கிற நேரத்தில் அப்பா வந்தார். வழக்கம் போல் சைக்கிளைத் தாழ்வாரத்தில் நிறுத்தினார். ஹாண்டில் பாரிலிருந்து பையைக் கழற்றி, உள்ளே கையை விட்டு, அட்டைப் பெட்டி ஒன்றை எடுத்தார். உள்ளே...!

இந்தக் கடிகாரம் இருந்தது. புதியதாக...! பளபளப்பாக - மின்விற்று! வெண்மை நிற டயல், பச்சை நிற எண்கள், ஜாக்கிரதையாக அப்பா அதை எடுத்தார், காதுக்கருகில் வைத்துக் கொண்டார். '...டிக்... டிக்...' என்ற அதன் ஓசையை ஒரு சுகானுபவத்துடன் ரசித்தார். சுவாமி அலமாரியில் கொண்டு வைத்தார்.

அடுத்த நாள் காலை ஒரு மர ஸ்டாண்டு தயாரானது. சுவரில் அடிக்கப் பட்டது. 'ஜம்'மென்று கடிகாரம் அதில் போய் உட்கார, "...என்ன விலை இது...?" தாத்தா, அப்பாவிடம் கேட்டார்.

"...நாற்பத்தஞ்சு ரூபா..."

"...காலம் காட்டும் கருவி...!" தாத்தா தமிழ்ப் பண்டிதர்; சிரித்தார். எகத்தாளம் கலந்த சிரிப்பு. 'அடேங்கப்பா! அவ்வளவா...?'

"...இதில் அலாரம் இருக்கு. ராத்திரியில் விளக்குப் போடாம, வெளிச்சம் இல்லாம மணி பார்க்கலாம்."

குச்சியை ஊன்றித் தாத்தா எழுந்தார். கடிகாரத்தின் அருகில் வந்து நின்றார். கண்களை இடுக்கி அதை ஒரு நிமிடம் கவனித்தார்.

"நாற்பத்தஞ்சு ரூபா செலவழிச்ச கடிகாரமா? அரைப் பவுன் வாங்கலாம் இந்தக் காசில். ம்...! பணத்தோட அருமை தெரியல்லையேடா உனக்கு! எல்லாம் காலம், வேறே என்ன...? அதோட கோளாறு! சுவத்துலே விழற நிழலைப் பார்த்தா மணி சொல்ல முடியாது...? கோழி கூவறதை வைச்சு எழுந்திருக்க முடியாது...? அலாரமா ம்... அலாரம்..."

இப்பொழுது அம்மா 'சட்'டென்று ஒரு காரியம் செய்தாள். கடிகாரத்தை எடுத்துத் தாத்தாவிடம் கொடுத்தாள்...! அப்பாவையும் அழைத்துக் கொண்டாள்.

"...வாங்கோ...! பெரியவாளை நமஸ்காரம் பண்ணி அவா கையாலே வாங்கிக்கலாம்" என்றாள்.

கடிகாரத்திற்குச் சாவி கொடுக்க வேண்டுமா...? அப்பாதான். அலாரம் வைக்க வேண்டுமா...? அவர்தான். வேறு யாரும் அதன் அருகில் போக முடியாது. அதை ஒரு பெரிய காரியமாக, டெக்னிகல் ரகசியமாக அவர் வைத்திருந்தார். அப்பா ஊரில் இல்லையென்றால் கடிகாரம் நின்று விடும்!

காலையில் எழுந்ததும் கடிகாரத்தை ஸ்டாண்டிலிருந்து எடுத்து மடிமேல் வைத்துக் கொள்வார். மேல் துண்டால் அதை ஒருமுறை அழுத்தித் துடைப்பார். அதற்கு வலிக்குமோ என்கிற மாதிரி சாவி கொடுப்பார். பக்கத்து வீட்டு ரேடியோவில் எட்டு மணி 'நியூஸ்' 'பீப்பீ' என்று ஒலிக்கும் சமயம் தலையை ஒருமுறை நிமிர்த்தி, கடிகாரத்தைக் கவனிப்பார்...! சரியாக எட்டில் இருந்தால், முகத்தில் அர்த்தபுஷ்டியுடன் ஒரு சிரிப்பு வரும். சற்று முன்னே பின்னே போய் விட்டால்... "ரேடியோக்காரன் ரெண்டு நிமிஷம் தூங்கிட்டான்...!"

அப்பாவைத் தவிர இந்த கடிகாரத்தின் மேல் கையை வைத்த பெருமை அண்ணனைத்தான் சேரும்.

அவன் காலேஜில் சேர்ந்த சமயம்...

"நாலு மணிக்கு எழுந்துக்கணும் அம்மா."

"அப்பா இல்லியே...! கடிகாரத்துக்கு யார் சாவி கொடுப்பா...?"

அண்ணா கொஞ்சமும் தயங்காமல் கடிகாரத்தை எடுத்தான்... 'கிடுகிடு' வென்று முள்ளைத் திருப்பினான்...! அலாரம் வைத்தான்...! சாவி கொடுத்தான்...!

எல்லாவற்றையும் ஒரு பதைபதைப்போடு அம்மா பார்த்துக் கொண்டிருந்தாள். 'இளங்கன்று... எதையோ திருகுகிறானே? அவர் வந்தால் கோபப்படுவாரே? என்ன பதில் சொல்லுவது? எப்படிச் சமாளிப்பது?'

அடுத்த நாள் அப்பா வந்து, கடிகாரம் இன்னும் ஓடிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்...! கிட்டே நின்று கவனித்தார்...!

"நாலு மணிக்கு அலாரம் வைச்சிருக்கு...?"

ஜி. நாராயணன்

"அண்ணாதான் விஷமம் பண்ணி னான்..."

ஒரு கலவரத்தோடு அம்மா என்னைப் பார்த்தாள். அண்ணனைப் பார்த்தாள். அப்பாவிடம் திரும்பினாள்.

"ம்...! பெரியவன் ஆயிட்டான்...! சரி.. விடு..." என்றார். அவ்வளவுதான்!

முதல் பார்வையிலேயே மன்னிக்கு அந்த கடிகாரத்தைப் பிடிக்கவில்லை...! அவள் கல்யாணம் ஆகி வீட்டுக்கு வந்திருந்த சமயம்-

"இது என்ன...? இவ்வளவு பழைய மாடல்...! ஓட்டை உடைசல்" என்றாள் அண்ணனிடம்...

"எப்பவோ அப்பா வாங்கினது."

"ச்சு! என் ப்ரெண்ட் கமலா வீட்டில் ஒரு 'க்ளாக்' இருக்கு...! இம்போர்ட்டட்...! பதினைந்து நிமிடத்துக்கு ஒரு தடவை 'கூக்கு...'ன்னு கோழி கூவற மாதிரி சத்தம் போடும்...! என்ன அழகு தெரியுமா?"

"இது நன்னா இருக்கே?"

"மாத்திடலாம்... சொல்றதைக் கேளுங்க..."

"பார்க்கலாம்..."

கடைசியில் மன்னி ஜெயித்து விட்டாள்...! ...ஆனால்... அதற்காக நாலு வருடம் காத்திருக்க வேண்டி இருந்தது...! அதற்குள் அம்மா இறந்து போக... அப்பா ரிடையர் ஆகி, வீட்டில் அண்ணன் கை ஓங்க...!



புதிய கடிகாரம் வந்து விட்டது...! ஹாலில், நல்ல இடமாகத் தேர்ந்தெடுத்து, அண்ணா அதை மாட்டினான்! அப்பொழுது, மன்னி லேசாகக் கை தட்டினாள்.

"நல்ல அமைப்பா இருக்கு இல்லே...! இப்பத்தான் ஹாலுக்கே ஓர் அழகு வந்திருக்கு!"

அப்பாவும் வந்து பார்த்தார். அந்தப் பார்வை அப்படியே திரும்பிப் பழைய கடிகாரத்திடம் வந்து நின்றது...! ஒரு பக்கமாகச் சாய்ந்து விட்ட மர ஸ்டாண்டு. பொலிவு இழந்த கடிகாரம். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். மௌனமாக நடந்தார். கடிகாரத்திடம் போனார்...! இனி மேல் உனக்கு இங்கே என்ன வேலை என்கிற மாதிரி, அதை எடுத்துக் கொண்டு போய் விட்டார்.

ரிடையர் ஆன அப்பா...! பென்ஷன் சமாசாரங்கள் எதுவும் இல்லாத இடமாக வேலை பார்த்து ரிடையர் ஆன அப்பா...! ஓய்ந்து போன அப்பா. கடிகாரத்தைத் தன் அறைக்குக் கொண்டு வந்தார். மேஜை மேல் வைத்தார். அதன் முட்கள் நகருவதை வேடிக்கை பார்த்தார்.

அப்புறம் அதுவே அவருக்கு ஒரு பொழுதுபோக்காயிற்று...! மணிக்கணக்கில் முட்கள் நகருவதைப் பார்த்தபடி இருப்பார்! இல்லையென்றால் பேரனைத் தூக்கிக் கொஞ்சுவார்...!

"எலே... நில்லுடா...! காலை நன்னா ஊனு..." - பேரனை அப்பா நிற்க வைக்க



"தெரு விளக்கு எரியலேன்னு புகார் கொடுத்தீங்களே, என்னாச்சு?"

"தப்பாப் போச்சு! விளக்குக் கம்பம் வேற ஒரு இடத்துக்குத் தேவைப்படு துன்னு கார்ப்பரேஷன்காரங்க வந்து தோண்டி எடுத்துட்டுப் போயிட்டாங்க!"

- கராடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

முயற்சி செய்தார். கூடவே நடக்க வைக்க...! பேரன், 'தத்தக்கா பித்தக்கா' வென்று நடந்தான்...! அப்பா, உட்கார்ந்த படியே அவன் கூடவே நகர்ந்தார். பேரன் பாலன்ஸ் இல்லாமல் தடுமாறினான். ஆட... ஆட... முன்பக்கம் சரிய... 'டக்' கென்று மேஜையைப் பிடித்துக் கொண் டான்...! மேஜை ஆட...''

''படார்...''

மேஜை ஓரத்தில் இருந்த கடிகாரம் ஒரு கோணத்தில் சாய்ந்தது...! உருண்டது...! கீழே விழுந்தது...!

''என்ன...? என்ன...?'' எல்லோரும் ஓடி வர,

கீழே விழுந்த கடிகாரத்தை அப்பா எடுத்தார். காதருகில் வைத்துப் பார்த்தார். 'டிக்.. டிக்... டிக்...' பழைய கானு பவம்...! மனம் அதில் லயிக்க...!

''என்ன இருந்தாலும்... பழைய காலத் துப் பொருள்னா அதோட மவுசே தனி தான்! பாரேன்... எவ்வளவு உசரத்திலிருந்து விழுந்தது. விழுந்தும் இன்னும் ஸ்ட் ராங்கா ஓடிண்டு இருக்கு...!''

''ஒருத்தருக்கும் உபயோகம் இல்லாம வெறுமனே, ஸ்டிராங்கா இருந்து என்ன பிரயோசனம்...?'' - மன்னியின் குரல் 'பட்' டென்று வந்தது.

அதில், தனக்கு ஏதோ செய்தி இருக்கிற மாதிரி அப்பா தவித்தார். துடித்தார். தலை குனிந்தார்...!

அண்ணா, மன்னியைப் பார்த்தான். முகத்தில் கோபம் இருந்தது. மன்னியின் மேல் காட்ட முடியாத கோபம்...!

''படவா!'' குழந்தையை இழுத்தான். அடிக்கப் போனான்...!

''விட்றா...'' என்றார் அப்பா பொது வாக. கடிகாரத்தை மடியில் வைத்துக் கொண்டார். மேல் துண்டால் அதை அழுத் தித் துடைக்க...

எனக்கு ஏனோ அப்பா முதன் முதல் இந்தக் கடிகாரத்தை வாங்கிக் கொண்டு வந்த தினம் நினைவுக்கு வந்தது.

---

◆ சாவி கைதான செய்தி கிடைத்ததும் கலைஞர் துடித்துப் போனார். முரசொலி செல்வம் கைது செய்யப்பட்டு பேரவைத் தலைவர் முன் ஆஜர் செய்யப்பட்டு என்ன விசாரித்தார் என்று என்னைக் கேட்கவில்லை. ''பெரியவர் சாவி கைது செய்யப்பட்டுள்ளார், அவர் எங்கு கொண்டு செல்லப்பட்டார் என்பது தெரியவில்லை; விசாரித்து உடனே கூறு'' என்று தான் கட்டளையிட்டார். நான் விசாரித்து அறிந்ததும், ''உடனே பெரியவர் சாவியைச் சந்திக்க வேண்டும், புறப்படு'' என்று கூறினார். அண்ணா நகர் காவல் நிலையம் சென்று சாவியைச் சந்தித்து ஆறுதல் கூறியதோடு, ''இவருடன் கைது செய்யப்பட்ட மணி, ரவிபிரகாஷ், ஆகியோரையும் பொறுப்பில் எடுக்க வேண்டும்; நீ உடனிருந்து மூவரையும் பொறுப்பில் எடுக்கும் வரை வீட்டிற்கு வரக் கூடாது'' என்று எனக்குக் கட்டளை இட்டுச் சென்றார். இரவு 12 மணிக்கு மேல் வழக்கறிஞர்களுடன் நானும் தலைவர் வீட்டுக்குச் சென்று, முழு விவரம் கூறிய பிறகு, தொலை பேசியில் சாவியுடன் பேசிய பின்பு தான் படுக்கச் சென்றார்.

நட்பு கருதி, 76 வயதான மூத்த பத்திரிகையாளர் என்ற உணர்வோடு ஆற்றிய பணியை ''அரசியல் ஆதாயம் தேடும் காரியம்'' என்று தாங்கள் தலையங்கம் தீட்டியதன் மூலம் பாரம்பரியமிக்க கல்கி இதழ் தவறு செய்து விட்டதாகவே நம்புகிறேன். எனது வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை - 14, எஸ். ஏ. எம். உசேன்.




# கைதானார் சாவி; துடித்துப் போனார் கலைஞர்!

◆ ''சாவி விவகாரம்'' தலையங்கம் கல்கி பத்திரிகைக்கு ஒரு மணிமகுடம்.

ஈரோடு, பாஸ்கர்.

◆ சாவி கைது விவகாரம் பற்றி மிகத் தெளிவாக ஆராய்ந்து எழுதிய பத்திரிகை கல்கி மட்டும்தான்.

திருவல்லிக்கேணி, பா. சடகோபன்.

◆ சக பத்திரிகையாளர் என்பதற்காக ஏனையோரைப் போல் 'சாவி'க்கு வக்காலத்து வாங்குவீர்கள் என நினைத்தால், தங்களின் தனித் தன்மையைத் தலையங்கத்தில் ஆழப் பதித்து விட்டீர்கள். அதிலும் கடைசி வரிகள் மிக அற்புதம்!

சிதம்பரம், டி. பி. ஸ்ரீதர்.

◆ ''டீன் ஏஜ்'' பருவ இளைஞரின் மன உணர்வுகளை ''வயது 17'' என்ற சிறுகதை வாயிலாக அழகாகப் படம்பிடித்துக் காட்டிய பா. ராஜனுக்குப் பாராட்டுக்கள்.

கடையம், அ. சொர்ணபாண்டியன்.

◆ இன்லண்ட் லெட்டர் சிறுகதையான ''ஒரிஜினல் மனிதன்'' கதையில் வரும் கதாநாயகனைப் போல் எல்லா ஆண்களும் நடந்து கொண்டால், வரதட்சணைக்காக கோர்ட்டுக்குப் போக வேண்டியதில்லை. அதற்காக எந்த வீட்டிலும் 'ஸ்டவ்' வெடிக்கப் போவதில்லை. கதாசிரியருக்கு நன்றி.

ஸ்ரீவில்லிபுத்தூர், தேனம்மாள் ராமசாமி.

◆ ''ராஜீவ் இல்லாத இந்தியா'' கவர் ஸ்டோரி படித்தேன். ஆத் தொகுப்பான சம்பவக் கோவைகள். கடந்த கால சம்பவங்களோடு நிகழ்கால சம்பவங்களும் இணைத்து, வெற்றிப் படத்தின் ஓரிய திரைக்கதை போல் கட்டுரை அருமையாக இருந்தது. கூடவே, ராஜீவ் இல்லாத காங்கிரஸ் பற்றியும் அலசி இருக்கலாம்.

திருச்சி, தாயு. செந்தில் குமார்.

◆ 'செம்பருத்தி' விமர்சனம் கண்டேன். மங்கையர் காண்பதற்கே சங்கடப்படும் ஒரு படம். அரங்கில் பெரும்பாலானோர் நெளிகின்றனர். இதெல்லாம் உங்கள் கண்ணில் படவில்லையா?

அம்பத்தூர், எஸ். ரெங்கநாதன்.

◆ ''பொதுநலம் பேசும் மனிதனே, தனக்கு என்று வரும்பொழுது எப்படி சுயநலவாதியாகி விடுகிறான் என்பதை ''மழை வரும்'' சிறுகதை மூலம் அருமையாக எடுத்துக் காட்டியிருக்கிறார் இந்திரா சௌந்தர்ராஜன்.

மதுரை - 16, வி. பி. மகராசி.

◆ ''ஓய்வு'' சிறுகதை என்று தோன்றவில்லை. உண்மை நிகழ்வின் வரி வடிவம் போலவே தெரிகிறது.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ கோடைக் காலத்தில் வியர்க் குருவினால் பாதிக்கப்படுபவர்களுக்கு, அதைத் தடுப்பதற்கு ஏற்ற வழிமுறைகளைக் கட்டுரையாக வெளியிட்டிருந்தது பயனுள்ள ஒன்று.

தூத்துக்குடி - 1, என். சம்பத்.

◆ ''கோடையில் ஒரு குறும்பு'' அத்தனையும் கரும்பாக இனித்தன.

கடையம், அன்பின் செபா.

# நேர்முகத் தேர்வில் நடந்தது!

திருமணத்திற்குச் சில வருடங்களுக்கு முன் ஒரு நல்ல கம்பெனியிலிருந்து இன்டர்வியூ வந்தது. அதன் ப்ளாஷ்பேக்...

''திருமணத்திற்குப் பின் வேலையை விட்டு விடுவாயா?''

''நிச்சயம் மாட்டேன்.''

''எப்படி அவ்வளவு தீர்மானமாகச் சொல்கிறாய்?''

''வேலையை விடக்கூடாது என்று சொல்லும் ஆணைத்தான் திருமணம் செய்து கொள்வேன்.''

''சரி என்று ஒப்புக் கொண்டு, பிறகு அடாவடியாக விடச் சொன்னால்.....?''

''விட்டு விடுவேன்... என் கணவனை.''

''அத்தியாவசியமான குடும்பச் சூழ்நிலை காரணமாக வேலையை விடச் சொன்னால்?''



''அவர் சொல்லு முன் நானே விட்டுவிடுவேன்.''

''என்ன இருந்தாலும் ஒரு நல்ல கம்பெனி வேலையை எப்படி இழக்கத் துணிவாய்?''

''இதை விட நல்ல 'கம்பெனி'யைக் குடும்பத்தில் நான் இழந்து விடக் கூடாது என்பதற்காக.''

என் பதிலைப் பாராட்டி, கையோடு அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டரையும் கொடுத்தார்கள்.

- ஆர். பானு, சென்னை - 78.

பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகை பரிசு பெறுபவர் :

*- ஆர். பானு,*
*37, 74 வது தெரு,*
*12 வது செக்டார்,*
*கே.கே.நகர், சென்னை - 600 078.*

## கைகொடுத்த சமயோசிதம்!

பட்டப்படிப்பை முடித்துவிட்டு, வருமான வரி அலுவலகத்தில் வருமான வரி இன்ஸ்பெக்டர் வேலைக்கான நேர்முகத் தேர்வுக்குச் சென்றிருந்தேன். பல கேள்விகளுக்குப் பிறகு, ''எத்தனை மொழிகள் தெரியும்?'' என்று கேட்டார் தேர்வு அதிகாரி. ''தமிழ், ஆங்கிலம், ஹிந்தி'' என்றேன்.

''மூன்றும் எழுதப் படிக்கத் தெரியுமா?'' என்றதற்கு, ''ஹிந்தி மட்டும் எழுத வராது; படிக்க மட்டுமே தெரியும்!'' என்றேன். ''அப்படியானால் படித்துக் காட்டு...'' என்றார்.



அங்குள்ள மேஜையில் எல்லாமே ஆங்கிலக் கோப்புகள். ஹிந்தியை எப்படிப் படித்துக் காட்ட முடியும்? சமயோசிதமாக அங்கிருந்த டெலிபோன் டைரக்டரி கண்ணில் பட, அதை எடுத்துப் பிரித்து ஹிந்தியிலிருந்த வாழ்த்துத் தந்தி வாசகங்களைப் படித்துக் காட்டினேன். வேலை கிடைக்கவில்லை என்றாலும் என் சமயோசிதத்தைப் பாராட்டினார் அந்த அதிகாரி.

- ஆர். சுந்தரி, சென்னை - 4.

## குட்டித் தங்கையின் சுட்டித்தனம்!

என் கடைக்குட்டித் தங்கைக்கு எல்.கே.ஜி. நேர்முகத் தேர்வு. தேர்வு நடத்திய ஆசிரியர் 'A, B, C, D' என்று பல கையில் எழுதிக் கோடிட்டு, அதைப் பார்த்துப் பலகையின் மீதுள்ள இடம் முழுவதிலும் எழுதுமாறு சொல்ல, என் தங்கையும்



எழுதினாள். ஆனால், A, B, D ஆகியவற்றைச் சரியாக எழுதியவள், C யை மட்டும் ɔ என்று தவறாக எழுதி விட்டாள். கடைசியில் தவறை உணர்ந்து, ஆசிரியர் எழுதிய ɔ வையும் அழித்துவிட்டு) என்று எழுதித் தந்துவிட்டாள். அவளது அந்த புத்திசாலித்தனத்திற்கு உடனே இடம் கிடைத்துவிட்டது!

- இரா. ராஜலக்ஷ்மி, சென்னை - 59

## தெளிவும் சுளிவும்!

இந்து அறநிலையத்துறையில் ஆடிட்டோர்க் வேலைக்கான இண்டர்வியூ. ஆறு இடங்களுக்கு நாற்பதுபேர் போட்டி. உள்ளே செல்லும் ஒவ்வொருவரும் தள்ளு கதவின் மேற்புறக் கொக்கியை இணைத்துவிட்டுச் சென்று, வெளியே வரும் போதும் அப்படியே இணைத்துவிட்டு வர வேண்டும். எனது முறை வந்தபோது, தள்ளு கதவின் கொக்கி, குள்ளமான எனக்கு எட்டவில்லை. பியூனும் அருகில் இல்லை. அதனால், நான் சடாரென்று தள்ளு கதவின் அடியில் குனிந்து அறைக்குள் சென்று விட்டேன். உள்ளே இருந்த அதிகாரிகள் சிரித்து, "What a daring and funny man you are!" என்று விமர்சித்தனர். பிறகு, ''இந்த வேலைக்கு நிறைய தெளிவு சுளிவுகள் தெரியணும்!'' என்றார் ஒருவர் கேலியாக. ''ஓ. கே. சார்! அது தெரிந்ததால்தான் கதவுக்கு அடியில் புகுந்து வந்தேன்!'' என்று நான் சொல்ல, மீண்டும் வெடிச்சிரிப்பு! வேலையும் கிடைத்துவிட்டது!

- பி.எஸ். ரங்கராஜன், சென்னை - 85.



## நான் ஏன் கூடாது?

ராணுவத்தில் சாதாரணச் சிப்பாயாக இருந்த நான், அதிகாரிகள் தேர்வுக்கான இண்டர்வியூ'வுக்குச் சென்றேன். அப்போது, ''நீ ஏன் அதிகாரியாக வேண்டும்?'' என்று நக்கலாக ஒரு கேள்வி. ''நீ ஏன் அதிகாரியாக விரும்புகிறாய்?'' என்று கேட்டிருந்தால் பதில் சொல்லலாம். இதற்கு என்ன சொல்வது? யோசித்தேன், ''நான் ஏன் அதிகாரியாகக் கூடாது என்பதற்கான காரணங்கள் ஏதும் இல்லை!'' என்றேன் துணிச்சலாக. ''வெரிகுட்! தன்னம்பிக்கை மிகுந்த பதில்!'' என்று பாராட்டியதோடு நாற்பது பேரில் என்னை மட்டுமே அன்று தேர்ந்தெடுத்தார்கள்!

- பி.ஆர். சீனிவாசன், வேலூர் (சேலம்).

## எழுத்தாளனால் முடியும்!

என்ஜினியரிங் முடித்த பிறகு இண்டர்வியூ. விகடனில் அறிமுகமாகிக் கல்கியில் பரிசு பெற்றவன் என்று பெருமையாக எனது கதைகளைக் காட்டினேன். தமிழே தெரியாத அந்த அதிகாரி, ''உன் வேலைக்கும் கதை எழுதுவதற்கும் என்ன சம்பந்தம்? அது வேலைக்கு இடைஞ்சல்தானே?'' என்றார்.

பாராட்டை எதிர்பார்த்த நான் அதிர்ச்சிக்குள்ளானேன். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, ''ஓர் எழுத்தாளனால் எல்லாக் கதாபாத்திரங்களாகவும் வாழ முடியும். அதனால் தொழிலாளர்களின் குறைகளையும் அதிகாரிகளின் அவசியத்தையும் நன்கு உணர்ந்து, இருதரப்பிலும் மற்றவர்களை விடச் சுமுகமாகப் பழகிப் பணி செய்ய முடியும்!'' என்றேன். வேலை கிடைத்து விட்டது!

- ஆர். சேகர் (நவீனி சாஸ்திரி), நெய்வேலி - 3.

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி மே 31, 1942

### ஒரு தேதி முன்னால்...

ஜூன் மீ முதல் தேதி சர்க்காரின் காகிதக் கட்டுப்பாட்டு விதிகள் அமுலுக்கு வருகின்றன. அந்த விதிகளின் சிக்கல்களை அவிழ்த்துத் தெரிந்து கொள்ளப் பெரிய பெரிய பத்திரிகைக்காரர்கள் முயன்று வருகிறார்கள். நம்முடைய இந்த இதழையோ மேற்படி விதிகள் வெளியாவதற்கு முன்பாகவே அச்சடிக்கத் தொடங்க வேண்டியதாயிருந்தது. இக் காரணங்களினால், இந்த இதழை ஒரு தேதி முன்கூட்டியே பிரகரிக்கத் தீர்மானித்து, மே மீ 31உயே வெளியிட்டிருக்கிறோம். அடுத்த இதழிலிருந்து அநேகமாகப் பழைய தேதிகளையே வைத்துக் கொள்ள இயலுமென்று நம்புகிறோம்.

*- என்ன சேதி?*

### தமிழ்நாட்டின் அருஞ்செல்வம்

தமிழ்நாட்டின் அருஞ்செல்வமான பரத நாட்டியக் கலை பாதாளத்தில் விழுந்து கிடந்தது. அதைத் தூக்கி எடுத்து, அதன் மேன்மையை உலகமறிய எடுத்துக் காட்டியவர் ஸ்ரீமதி பாலஸரஸ்வதி. ஏழு வருஷத்துக்கு முன் ஒருமுறை பாலசரஸ்வதியின் நடனத்தை ஸ்ரீ உதய சங்கர் பார்த்தார். பார்த்து பிரமித்து, ''இம்மாதிரி நாட்டியக் கலை உலகத்திலேயே கிடையாது'' என்றார். இதைக் கேட்டுத் தமிழ்நாட்டில் பலர் பரத நாட்டியத்தின் பெருமையை உணர்ந்தார்கள். அதற்குப் பிறகு, பரதநாட்டியக் கலை தமிழ்நாட்டில் மிகவும் பிராபல்யமாகியிருக்கிறது. அநேகர் அக் கலையில் அரிய தேர்ச்சியடைந்து, கலைக்கே சிறப்பை அளித்திருக்கிறார்கள். ஆனால் முகபாவங்களின் இந்திரஜால வித்தைகளில் பாலஸரஸ்வதிக்கு இணையாக வேறொருவர் இன்னும் தோன்றவில்லை. பாலஸரஸ்வதியின் கலைச் சிறப்பு மேன்மையடைந்து விளங்குவதற்கு அவருடைய தாயார் ஸ்ரீமதி ஜயம்மாவின் பாவ சங்கீதம் - முக்கியமாக, தமிழ்ப் பதங்கள் - பெரிதும் துணையாயிருந்து வருகின்றன.




*- அட்டைப்பட விளக்கம்*

### சின்னக் கெடுதலும் பெரிய கெடுதலும்

விகடன் ராஜாஜியைப் பார்த்து,

''தங்கள் பிரசங்கங்களில் தாங்கள் வாய் தவறி ஏதாவது சொன்னாலும் அதுவும் சரிதான் என்று ஜனங்கள் கேட்டுக் கொண்டிருப்பது வழக்கம். ஆனால் இன்று அவர்கள் தங்களை எதிர்த்துக் குறுக்குக் கேள்விகள் கேட்டுக் கலாட்டா செய்கிறார்கள்.''

என்று சொல்கிறான்.

விகடனுக்குப் புத்தி மாறாட்டம் ரொம்ப அதிகமாய்ப் போயிருக்க வேண்டும். இல்லாவிட்டால், ராஜாஜியின் கூட்டங்களில் கலாட்டா செய்கிறவர்கள் எப்போதுமே உண்டு என்பதை அவன் மறந்திருக்க முடியாது.

ராஜாஜி மதுவிலக்குப் பிரசாரம் செய்த போது போட்ட கூட்டங்களில், குடிகாரர்கள் வந்து குறுக்குக் கேள்விகள் கேட்டுக் கலாட்டா செய்திருக்கிறார்கள்!

அவர் ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்காகப் போட்ட கூட்டங்களில் வீர 'ஸநாதனி'கள் குறுக்குக் கேள்விகள் கேட்டுக் கலாட்டா செய்திருக்கிறார்கள்.



அவர் சத்தியாக்கிரஹ இயக்கத்தின் போதும், தேர்தல்களின் போதும் பேசிய கூட்டங்களில், சுயமரியாதைக்காரர்கள் குறுக்குக் கேள்விகள் கேட்டுக் கலாட்டா செய்திருக்கிறார்கள்.

அவர் பிரதம மந்திரியாயிருந்த போது பேசிய கூட்டங்களில் 'ஆன்டி - ஹிந்தி வாலா'க்கள் வந்து குறுக்குக் கேள்விகள் கேட்டுக் கலாட்டா செய்திருக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் அவருடைய கூட்டங்களில் கல்லெறிந்து கலாட்டா செய்தவர்களேதான், விகடன் காரியாலயத்தின் மேலும் கல்லெறிந்து 'நியான் லைன்' போர்டை உடைத்து நொறுக்கினார்கள்!

ஆகவே, ராஜாஜியின் கூட்டங்களில் கலாட்டா நடப்பது புதியதல்ல; அதில் ஆச்சரியமுமில்லை. அந்தக் கலாட்டா கூட்டத்

தில் ''விகடன்'' சேர்ந்திருப்பதுதான் ஆச்சரியத்திலும் ஆச்சரியமான விஷயம்.

★ ★ ★

ராஜாஜி தமிழ் மக்களை ஏமாற்றப் பார்க்கிறார்! அவர்கள் ஏமாறாமல் பார்த்துக் கொள்ள விகடன் முன்வந்திருக்கிறான்!

இந்த அபாண்டப் பழியை ராஜாஜியின் மீது விகடன் எந்த ஆதாரத்தின் மேல் போடுகிறான்?

ராஜாஜி முன்னுக்குப் பின் விரோதமாக அப்படி என்ன பேசுகிறார்?

முன்னே அவர், ''பாகிஸ்தான் கெடுதல்'' என்று சொன்னார்.

இப்போது, ''பாகிஸ்தான் நல்லது'' என்கிறாரா?

ஒரு நாளும் இல்லை.

இப்போதும் ''பாகிஸ்தான் கெடுதல்'' என்றுதான் சொல்கிறார்.

தேசத்தைப் பிளப்பது நல்லது; விரும்பத்தக்கது என்று யார்தான் சொல்வார்கள்? ராஜாஜி நிச்சயமாகச் சொல்லவில்லை.

முன்னால் தாம் சொன்னதை ராஜாஜி மறைக்கவில்லை. ஜனங்களை மறந்து விடும்படியும் சொல்லவில்லை! பின்னர், ஜனங்களை அவர் ஏமாற்றுவதோ, ஜனங்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதோ எங்கிருந்து வந்தது?

கெடுதல்களில் சின்னக் கெடுதல், பெரிய கெடுதல் என்று உண்டு.

'பாகிஸ்தான்' என்பது சின்னக் கெடுதல்; பராதீனம், அடிமைத்தனம் என்பவை மகா பயங்கரமான பெரிய கெடுதல்கள்.

''அடிமைத்தனமாகிற பெரிய கெடுதலை விலக்குவதற்காகச் சின்னக் கெடுதலாகிய பாகிஸ்தான் உரிமையை ஒப்புக் கொள்ளலாம்'' என்கிறார் ராஜாஜி. இதில் ஏமாற்றுவதோ, ஏமாறுவதோ எங்கிருந்து வந்தது?

கொயினா கசப்பு மருந்து. கொயினா சாப்பிடாமலே சுரம் சொஸ்தமானால் நல்லது. சுரம் கொஞ்சமாயிருக்கும் வரையில் ''கொயினா வேண்டாம்'' என்கிறோம். சுரம் மீறிப் போனால், ''கொயினா சாப்பிட்டுத் தொலை'' என்கிறோம். இது முன்னுக்குப் பின் விரோதமானதா?

– ''தைரிய போதனை'' கட்டுரையிலிருந்து சில பகுதிகள்

## சபாஷ் சங்கீத பூபதி!

கர்நாடக சங்கீத வித்வான்களில் புதிய பாணியைக் கையாளும் பெருமை சிலருக்குத்தான் கிட்டுகிறது. ஒரு வித்வானிடம் புதிய 'பாணி'யைக் கேட்டு அதில் மோகம் அடைந்து விடும் ரஸிகர்களுக்கு வேறு யாருடைய பாட்டும் பிடிப்பதில்லை. சங்கீத பூபதி மகாராஜபுரம் விசுவநாதய்யர் மேற்கூறிய பெருமைக்குரியவராவர். ஆகையினால்தான், ''கேட்டால் மகாராஜபுரம் பாட்டுக் கேட்க வேண்டும்; இல்லாவிட்டால் காதில் பஞ்சை அடைத்துக் கொள்ள வேண்டும்'' என்று சொல்லும் ரஸிகர்கள் தமிழ்நாட்டில் இருக்கிறார்கள். இத்தகைய பிரபல வித்வான் தமிழ்ப் பாட்டு இயக்கத்தில் ஊக்கம் காட்டுவது அந்த இயக்கத்துக்கே பெரிய பலம் என்று சொல்ல வேண்டும். இவருடைய சமீப கால ரேடியோ புரோகிராம்களில் நிறையத் தமிழ்ப் பாட்டுக்களைக் கேட்க முடிந்தது. முக்கியமாக மே மீ 2௨ கச்சேரியில் மிகப் பெரும்பாலும் தமிழ்ப் பாட்டுக்களாகவே ஜமாய்த்து விட்டார். சபாஷ், சங்கீத பூபதி!



## என்ன தைரியம்!














# ஹெக்டே நடிக்கும் சினிமா!

கன்னடத் திரையுலகில் இன்று கொடி கட்டிப் பறக்கும் முன்னணி நடிகை மாலாஸ்ரீ. காமெராவைச் சந்திப்பது அவருக்கு அனாயாசமாகக் கைவரும்.

ஆனால் சமீபத்தில் நடந்த ஒரு ஷூட்டிங்கின் போது, மாலாஸ்ரீ பதற்றத்தில் வசனங்களை மறந்து போனார்; மன்னிப்புக் கோரி 'ரீ-டேக்'க்குத் தயாரானார்! காரணம்...? அன்று மாலாஸ்ரீயுடன் நடித்த புதுமுகம்தான்... ஆனால் அந்தப் புதுமுகமோ மிகச் சுலபமாக முதல் டேக்கிலேயே 'ஓ.கே.' வாங்கி யூனிட்டின் பாராட்டைப் பெற்றார்.

''அற்புதமாக நடிக்கிறார். அவருடன் நடிப்பது எவ்வளவு மகத்தான அனுபவம்...! என்னையறியாமல் ஏற்பட்ட மரியாதைப் பெருக்கில் வசனங்களை மறந்து போனேன்...'' என்கிறார் மாலாஸ்ரீ.

மாலாஸ்ரீ குறிப்பிடும் 'புதுமுகம்' கர்நாடகத்தின் முன்னாள் முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டே.

நான்கு வாரங்களுக்குத் தொடர்ந்து தயாரிப்பாளர் கே. சிதம்பர ஷெட்டி வலியுறுத்திக் கேட்டுக் கொண்டதன் பேரில் ஹெக்டே 'மரண மிருதங்க' என்ற கன்னடப் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டார் - முதலமைச்சர் பாத்திரத்தில்.

பலரையும் கலந்தாலோசித்த பிறகே முடிவுக்கு வந்த ஹெக்டே, தம் மனைவி, மகளின் இசைவைப் பெறுவதுதான் மிகவும் சிரமமாய் இருந்தது என்கிறார். ''நல்ல காலம், என் மகள்கள் இப்போது இங்கு இல்லை; இருந்திருந்தால், அவர்கள் சம்மதத்தைப் பெறுவதுதான் மிகவும் கஷ்டமாக இருந்திருக்கும்'' என்கிறார்.

'மரண மிருதங்க'வில் ஹெக்டே ஏற்கும் முதலமைச்சர் கதாபாத்திரம் நேர்மையான, அரசியல் பண்புகளில் நம்பிக்கையுள்ள கதாபாத்திரமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. ஆனால் அப் படத்தின் கதை தம்மை மனத்தில் கொண்டு எழுதப்பட்டது அல்ல என்கிறார் ஹெக்டே. அரசியல் பின்னணி இருந்தாலும் 'மரண மிருதங்க'வை ஒரு சரித்திரத் திரைப்படம் என்றே அழைக்க விரும்புகிறார் ஹெக்டே. குண்டர்கள் பிடியில் அகப்பட்டு அரசியல் சீரழிவதைக் கதை உணர்த்துவதால் இப் படம் தற்காலச் சரித்திரத்தைச் சித்திரிப்பதாகக் கொள்ளலாம்.

இப் படத்தின் கதையைப் பற்றி மேலும் விவரங்கள் தர மறுக்கிறார் ஹெக்டே. ''ஷூட்டிங் நடக்கையிலேயே கதை அமைப்பில் மாறுதல்கள் செய்யப்படலாம்...'' என்கிறார்.

ஹெக்டே ஏன் சினிமாத் துறையில் நுழைந்தார் என்பது பலருக்குப் புரியாத புதிராக இருக்கிறது. நடிப்புக்காக அவருக்குச் சேர வேண்டிய தொகை முழுதும் தனியார் அறக்கட்டளைக்கு வழங்கப்பட இருப்பதால் ஹெக்டே பணத்துக்காக நடிக்க ஒப்புக் கொண்டார் என்றும் கூற முடியாது.

''சினிமாவில் நடிப்பது ஓர் அற்புதமான பொழுதுபோக்காக அமையும்'' என ஹெக்டே சொல்வதை நம்புவதுதான் கஷ்டம். ஏனெனில் அவர் சார்ந்திருக்கும் ஜனதா தள கட்சியின் நடவடிக்கைகள் அந்த அளவுக்கு எல்லோரையும் சோர்வுறச் செய்து விட்டது!

இந்தத் திரைப்பட அனுபவத்துக்குப் பிறகு ஹெக்டே புத்துணர்ச்சி பெற்று அரசியலுக்குத் திரும்புவாரா எனப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும்!

இன்றைய கர்நாடக முதல்வர் பங்காரப்பாவோ, ''நிஜ முதல்வராக இருந்த போது சாதிக்கத் தவறியதை, ஹெக்டே வெள்ளித் திரை முதல்வர் என்கிற முறையில் சாதிக்கிறாரா என்று பார்ப்போம்...!'' என்கிறார்.

நன்றி : ஹிந்துஸ்தான் டைம்ஸ்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.




# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவனது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம் போஷாக்கு நிறைந்த ஸிரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

**எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி ஸிரியல்.**

**நெஸ்டம்**

---

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய் பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்.

